மலர் 16 இதழ் 124

NAVAMANI, Tamil Daily MADRAS

4 பக்கம் 25 காசு

R. No. 1897

Phone No. 76190 76199

"நவமணி"
சந்தா விகிதம்
1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8.00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45.00 | ரூ. 48.00 |
| 1 வருடம் | ரூ. 90.00 | ரூ. 96.00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 17—1—76 சனி

வெளியூர் 18—1—76 ஞாயிறு



## சிம்சன் குரூப் நிறுவனங்களில்
# 12,000 பேருக்கு சம்பள உயர்வு

## குசேலர் கையெழுத்திட்ட புதிய ஒப்பந்தம்

சென்னை, ஜன. 17—சிம்சன் குரூப் நிறுவனங்களில் பணியாற்றுகிற சுமார் 12 ஆயிரம் ஊழியர்களுக்கு சம்பள உயர்வு கிடைக்கும்.

இவர்களில் மிகப் பெரும்பாலானோர் 75 ரூபாய் சம்பள உயர்வு பெறுவார்கள் இதனால் ஆண்டு தோறும் நிர்வாகத்திற்கு ஒரு கோடியே 30 லட்சம் ரூபாய் கூடுதல் செலவாகும்.

இது சம்பந்தமாக ஒரு ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளது. இந்த ஒப்பந்தம் இரண்டரை வருடத்திற்கு அமுலில் இருக்கும்.

1975ம் ஆண்டுக்காக ஒரு தொழிலாளிக்கு 900 ரூபாய் வீதப் பாக்கித் தொகை செலுத்தப்படும்.

சிம்சன் குரூப் ஊழியர் தொழிலாளர்கள் சங்கங்கள் சார்பாக ஆர். குசேலர், வி. பி, சிந்தன், சி. கே. மாதவன் ஆகியோர் இந்த ஒப்பந்தத்தில் கையெழுத்து போட்டனர்.

நிர்வாகத்தின் சார்பாக அமால்கமேஷன்ஸ் டைரக்டர் ஏ. கிருஷ்ணமூர்த்தி (சிவசைலத்தின் தம்பி)யும், சிம்சன் குரூப் கம்பெனிகளைச் சேர்ந்த ஒவ்வொரு கம்பெனியின் ஜெனரல் மானேஜர்களும் கையெழுத்து போட்டனர்.

சிம்சன் குரூப் நிறுவனங்களில் பணியாற்றி வருகிற சுமார் 12 ஆயிரம் பேர்களில் மிகப் பெரும்பாலானோருக்கு இந்த ஒப்பந்தத்தின் விளைவாக 75 ரூபாய் வரை மொத்த ஊதிய உயர்வு கிடைக்கும், இதர மறைமுகப் பயன்களும் கிடைக்கும்.

இனிமேல் அவர்களுக்கு புதிதாக வீட்டு வாடகையாக 40 ரூபாயும், பஞ்சப்படி உயர்வாக 33 ரூபாயும் அளிக்கப்படும்.

### இறக்கும் ஊழியர் குடும்பத்திற்கு ரூ. 10,000 உதவி

ஒவ்வொரு தொழிலாளிக்கும் மாதம் 2 ரூபாய் வீதம் கணக்கு போட்டு, இறக்கும் ஊழியர் குடும்ப பாதுகாப்பு நிதிக்கு நிர்வாகத்தினர் பணம் செலுத்துவார்கள். இறக்கும் தொழிலாளரின் குடும்பத்திற்கு இந்த நிதியிலிருந்து சுமார் 10 ஆயிரம் ரூபாய் உதவி அளிக்கப்படும்.

இந்த ஒப்பந்தத்தின் விளைவாக ஆண்டுக்கு ஒரு கோடியே 30 லட்சம் ரூபாய் நிர்வாகம் கூடுதலாக செலவிட வேண்டி இருக்கும்.

சிம்சன் கம்பெனியின் 4000 ஊழியர்கள், இந்தியா பிஸ்டன் கம்பெனியின் 4,000 ஊழியர்கள். ஆமகோ கம்பெனியின் 1,000 ஊழியர்கள், டாபே கம்பெனியின் 300 ஊழியர்கள் சார்டுலா கம்பெனியின் 500 ஊழியர்கள் அடிசன் பெயிண்ட்ஸ் நிறுவனத்தின் 500 ஊழியர்கள் மற்றும்வான போபாஸ், பை மெடல்ஸ், இந்தியா பிரிட்டன் நெல்கோ, ஸ்பீட், ஏ. வே. ஜார்ஜ் லுக்ஸ், ரெய் கோல்ட் கெமிகல்ஸ், மதராஸ் அட்வர்டைசிங் கம்பெனி முதலிய நிறுவனங்களின் ஊழியர்கள் ஆக மொத்தம் சுமார் 10 ஆயிரம் பேர்களுக்கு 75 ரூபாய் மொத்த ஊதிய உயர்வு கிடைக்கும்.

ஹிக்கின்பாதம்ஸ், எஸ். ஆர். வி. எஸ்., அசோசியேட்டட் பிரிண்டர்ஸ் ஆகிய கம்பெனிகளின் ஊழியர்களுக்கு சுமார் 50 ரூபாய் ஊதிய உயர்வு கிடைக்கும்.

மற்றொரு நிறுவனத்தின் ஊழியர்களுக்கு 40 ரூபாய் ஊதிய உயர்வு கிடைக்கும்.

### முன் பாக்கி

கடந்த 1975-ம் வருட ஊதிய உயர்வு பாக்கியாக ஒவ்வொரு ஊழியரும் 900 ரூபாய் (மாதம் ரூ. 75 வீதம் 12 மாதங்களுக்கான தொகை) பெறுவார். 50 ரூபாய் ஊதிய உயர்வு பெறுகிறவர் 600 ரூபாயை பாக்கித் தொகையாக பெறுவார்.

இந்த பணத் தொகையைச் செலுத்த ஒரு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. அதில் 60 லட்சம் ரூபாயை பொங்கலுக்கு முன்னதாகவே ஊழியர்களுக்கு நிர்வாகம் செலுத்தி விட்டது. பாக்கித் தொகை வினியோகிக்கப்படும் தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

### குசேலர் பேட்டி

இந்த ஒப்பந்தமானது சிம்சன் தொழில் நிறுவனங்களின் சீரான முன்னேற்றத்திற்கு வழி செய்யும் என்று தாம் நம்புவதாக "நவமணி" நிருபரிடம் சிம்சன் தொழிற் சங்கத்தின் தலைவர் ஆர். குசேலர் கூறினார்.

குசேலர் கூறியதாவது:—
சிம்சன் குரூப் நிறுவனங்களில் கடந்த சில வருட காலமாக லே ஆப், கதவடைப்பு போன்ற சிக்கல்கள் ஏற்பட்டு வந்தன.

இந்த ஒப்பந்தத்தினால் நிர்வாகத்திற்கு சுமை ஏற்பட்ட போதிலும், தொழிலாளர்களின் முழு ஒத்துழைப்புடன் இந்தத் தொழில் நிறுவனங்கள் சீரான முறையில் முன்னேற இந்த ஒப்பந்தம் வழி வகுக்கும் என்று நம்புகிறேன் என்றார் குசேலர்.

## மந்திரி ராசாராம் வந்த ரெயிலுக்கு விபத்து

சென்னை ஜன. 17—மந்திரி ராசாராம் சென்னைக்கு பயணம் செய்து கொண்டிருந்த பாண்டியன் எக்ஸ்பிரஸ் ரெயிலின் ஒரு பெட்டி நேற்று இரவு தடம் புரண்டு விட்டது.

லால்குடி அருகே இந்த விபத்து ஏற்பட்டது. தடம் புரண்ட பெட்டியின் பக்கத்து பெட்டியில் ராசாராம் பயணம் செய்தார். இதனால் மந்திரி சென்னைக்குக் காரில் புறப்பட்டு வந்து சேர்ந்தார்.

## மணிப்பூரில் மேலும் 10 மந்திரிகள் பதவி ஏற்பு

இம்பால், ஜன. 17—மணிப்பூர் மந்திரி சபையில் மேலும் 10 பேர் மந்திரிகளாக இன்று பதவி ஏற்றனர். இப்போது மணிப்பூர் மந்திரிகளின் எண்ணிக்கை 16 ஆக உயர்ந்து விட்டது.

## சென்னையில் வாழைப்பழ கண்காட்சி

சென்னை ஜன, 17—சென்னை ராஜாஜி மண்டபத்தில் இன்று வாழைப்பழம் கண்காட்சியை அமைச்சர் கண்ணப்பன் திறந்து வைத்தார். இதில் 120 வாழைப்பழ ரகங்கள் இடம் பெற்றுள்ளன.

## டி. பி. ஏழுமலை பதவி நீக்கம்

சென்னை, ஜன 17—தமிழ்நாடு தாழ்த்தப்பட்டோர் லீக் பொதுச் செயலாளர் பதவியிலிருந்து டி. பி, ஏழுமலையை நீக்கியிருப்பதாக அந்த லீகின் தலைவர் ஆர் எஸ் ஆறுமுகம் அறிவித்துள்ளார்.

கட்சி விரோதமான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பதால் ஏழுமலை மீது இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டிருப்பதாக ஒரு அறிக்கையில் ஆறுமுகம் கூறியுள்ளார்.

## ரெயில்வே காஷுவல் தொழிலாளர்களுக்கு மந்திரி வாக்குறுதி

புதுடெல்லி, ஜன. 17—கற்காலிக ரெயில்வே ஊழியர்களுக்கு வேலை அளிப்பது குறித்து அரசு பரிசீலிக்கும் என்று மத்திய ரெயில்வே துணை மந்திரி மகமது ஷாபி குரேஷி உறுதியளித்தார்.

மக்கள் சபையில் நடைபெற்ற விவாதத்துக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் 1974—ல் நடைபெற்ற ரெயில்வே ஸ்டிரைக்கில் ஈடுபட்ட ஊழியர்களை திரும்ப எடுத்துக்கொள்வதில் நிர்வாகம் திறந்த மனத்துடன் இருப்பதாக தெரிவித்தார்.

ஸ்டிரைக்கில் ஈடுபட்ட 16 ஆயிரத்து 898 ஊழியர்கள் வேலையிலிருந்து நீக்கப்பட்டனர் என்றும் இவர்களில் 95 சதவிகிதத்தினர் திருப்ப எடுத்துக் கொள்ளப்பட்டனர் என்றும் தெரிவித்தார்.

மீதியுள்ள 450 பேர் நீதி மன்றம் சென்றிருப்பதாகவும், 70 பேர் அப்பீல் எதுவும் செய்து கொள்ளவில்லை என்றும் மந்திரி தெரிவித்தார்.

குற்றம் நிரூபிக்கப்பட்ட சிலருக்கு மீண்டும் வேலை தர முடியாத நிலையிலிருப்பதாகவும் தெரிவித்தார்.

தற்காலிக சிப்பந்திகள் சம்பந்தமாக ரெயில்வே நிர்வாகம் பரிசீலனை செய்யும் என்று மந்திரி கூறினார்.

இவர்களை வீட்டுக்கு அனுப்பும் எண்ணம் ரெயில்வேக்கு இல்லை என்றும், ஆனால் இப்போது இவர்களுக்கு வேலை தர முடியாத நிலையிலிருப்பதாக மந்திரி தெரிவித்தார்.

வேலை காலி ஏற்படும் போது இவர்களுக்கு வேலை தரப்படும் என்று மந்திரி உறுதியளித்தார்.




## ஜகஜீவனை கருணாநிதி சந்திக்கிறார்

சென்னை, ஜன. 17—மத்திய அமைச்சர் ஜெகஜீவன் ராமை நாளை சந்தித்துப் பேசப்போவதாக முதல்வர் கருணாநிதி இன்று தெரிவித்தார்.

### மாதவன் திரும்பினார்

திட்டக் கமிஷனுடன் பேச டெல்லி சென்றிருந்த மந்திரி மாதவன் சென்னை திரும்பினார்.

டெல்லியில் நடைபெற்ற பேச்சு வார்த்தை விவரங்களை அவர் இன்று நிருபர்களிடம் விளக்கினார்.

## மனோரமா ஸ்ரீவித்யா கலந்து கொண்ட பொங்கல் விழா

சென்னை ஜன. 17-சென்னை விருகம்பாக்கத்தை அடுத்த சாயி நகரில் நடந்த பொங்கல் விழாவில் நடிகைகள் மனோரமாவும் ஸ்ரீவித்யாவும் கலந்து கொண்டார்.

சாயி நகர் குடியிருப்போர் சங்க சார்பில் பொங்கல் விழா காலை 10 மணி முதல் இரவு 10 மணிவரை நடந்தது.

போட்டிப் பந்தயங்கள், கலை நிகழ்ச்சிகள், கதாகாலட்சேபம், நாடகம், போன்ற பல நிகழ்ச்சிகள் நடந்தன.

பரிசு பெற்றவர்களுக்கு மனோரமாவும், ஸ்ரீவித்யாவும் பரிசுகளை வழங்கினார்கள்.

வி. வைத்தியநாதன் தலைமையில் நடந்த இந்த விழாவுக்கு வந்திருந்தவர்களை எஸ். ரங்கராஜன் வரவேற்றார்.

## உச்ச கமிட்டி சிபாரிசை அமுலாக்க சட்டம்: மத்திய அரசு பரிசீலனை

புதுடெல்லி, ஜன. 17— இரு தரப்பு தேசிய உச்ச கமிட்டியின் சிபாரிசுகளை அமுல்படுத்துவது சம்பந்தமாக சட்டமியற்றுவது குறித்து மத்திய அரசு பரிசீலித்து வருகிறது.

மத்திய தொழிலாளர் நல மந்திரி ரகுநாத ரெட்டி இந்த தகவலை வெளியிட்டார்.

மக்கள் சபையில் கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் உச்ச கமிட்டியின் சிபாரிசுகளை அமுல் படுத்தவில்லை என்று கூறுவது சரியல்ல என்று மந்திரி தெரிவித்தார்.

உச்ச கமிட்டியின் சிபாரிசுகளை அமுல் படுத்த எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை என்று கூறுவதும் சரியல்ல என்று தெரிவித்த அவர் இதில் சில சிக்கல்கள் ஏற்பட்டு வருகிறது என்று கூறினார்.

உச்ச கமிட்டியை அமைக்க வேண்டும் என்ற சிபாரிசை டெல்லியும், குஜராத்தும் பரிசீலித்து வருவதாகவும் அவர் தெரிவித்தார்.

தமிழ்நாடு, மத்தியப் பிரதேசம், ஒரிசா, போன்ற 8 மாநிலங்கள் உச்ச கமிட்டி அமைக்க தேவையில்லை என்று கருதுகின்றன என்றும் மந்திரி தெரிவித்தார்.

இப்போதுள்ள தொழிலாளர் ஆலோசனைக் குழுக்கள் இத்துறையில் நல்ல முறையில் செயல்பட்டு வருவதாக மேற்கண்ட மாநிலங்கள் கருதுகின்றன என்றார் அவர்.

ஆயினும் தேசிய உச்ச கமிட்டியின் வற்புறுத்தலின் பேரில் அவைகள் தங்களது முடிவை மறு பரிசீலனை செய்வதாகத் தெரிவித்திருப்பதாக அவர் கூறினார்.

இத்திட்டம் சம்பந்தமாக டெல்லி முடிவெடுத்து விட்டதாக தம்மிடம் கூறப்பட்டிருப்பதாகவும், தமிழக தொழிலாளர் நல அமைச்சரும் இது குறித்துப் பரிசீலிப்பதாக தெரிவித்திருப்பதாகவும் மந்திரி தெரிவித்தார்.

## ஏமாற்றும் போலி யோகிகள்

சென்னை, ஜன. 17—யோகாசனத்தைப் பற்றி சிறிதளவே தெரிந்தவர்கள் எல்லாம் யோகிகள் என்றும், யோகாசன ஆசிரியர்கள் என்றும் கூறிக்கொண்டு ஏமாற்றிவருகிறார்கள் என்று சென்னை ஷெரிப் ராமகிருஷ்ணன் கூறினார்.

சென்னையில் கைவல்யதாம யோகாசன நிலையத்தின் 5-வது முகாமை முடித்து வைத்து ராமகிருஷ்ணன் பேசினார்.

யோகிகள் என்று நடித்து நாட்டவர்களை ஏமாற்றிவரும் போலிகள் குறித்து பொதுமக்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று அவர் கூறினார்.

மக்களின் உடலையும் உள்ளத்தையும் வலுவுடையதாகச் செய்யும் யோகாசனப் பயிற்சிக்கு மத்திய, மாநில அரசுகள் ஊக்கம் தர வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார்.

இந்த நிகழ்ச்சியில் பேசிய தமிழக சுகாதாரத் துறை இயக்குநர் டாக்டர் பாலகிருஷ்ணன், மாநில அரசு சாத்தியமான எல்லா உதவிகளையும் செய்யும் என்று உறுதியளித்தார்.

டாக்டர் எம்.வி. போலே பேசுகையில் பிராணாயாமத்தின் மூலம் ரத்த அழுத்தத்தை குறைக்க முடியும் என்று தெரிவித்தார்.

துணை ஷெரீப் எம். சரவணன் வரவேற்புரை நிகழ்த்தினார்.

அறிக்கை சமர்ப்பித்த ஹரிகோபால் அகர்வால் 3 பெண்கள் உட்பட 59 பேர் யோகாசன முகாமில் கலந்து கொண்டனர் என்று தெரிவித்தார்.

## துருக்கியில் இந்திய ஓவிய கண்காட்சி

புதுடெல்லி, ஜன. 17—இந்திய - துருக்கி கலாச்சார சங்கத்தின் ஆதரவில் ஏற்பாடு செய்யப்பட்ட "கால ஓட்டத்தில் இந்திய ஓவியங்கள்" என்ற கண்காட்சி ஒன்றை, துருக்கி நாட்டு கலாச்சார அமைச்சர் ரிப்கி தேனிஷ்மன் சென்ற 7-ஆம் தேதி அங்காராவில் திறந்து வைத்தார்.

இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டு அமைச்சர் பேசுகையில் இந்தியாவுக்கும் துருக்கிக்கும் இடையேயான கலாச்சார உறவுகளை மேம்படுத்தும் முயற்சிகளில் அங்காராவிலுள்ள இந்தியத் தூதரகத்துக்குத் அரசு எல்லா உதவிகளையும் வழங்கும் என்று சொன்னார். அமீர் குஸ்ருவின் சர்வதேச நினைவுச் கருத்தரங்கில் துருக்கியும் பங்கு கொள்ளும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

### மண் வள சோதனை:
## கிராம மாணவருக்கு 3 மாத பயிற்சி திட்டம் ஜெகஜீவன் யோசனை

கோவை, ஜன. 17—மண்வள சோதனை குறித்து கிராமங்களில் மாணவர்களுக்கும், மாணவிகளுக்கும் 3 மாதப் பயிற்சி அளிக்கப்படவேண்டும் என்று மத்திய மந்திரி ஜெகஜீவன்ராம் யோசனை கூறினார்.

இன்று கோவையில் விவசாயப் பல்கலைக் கழகத்தின் பட்டமளிப்பு விழா நடந்தது. மந்திரி ஜெகஜீவன்ராம் பட்டமளிப்பு உரை நிகழ்த்தினார்.

மண்வள சோதனை பற்றி கிராம மாணவர்களுக்கான பயிற்சி முடிந்ததும் அவர்களுக்கு தகுந்த கருவிகள் வழங்கப்பட வேண்டும் என்று மந்திரி தெரிவித்தார்.

இந்த திட்டத்தினால் விவசாய வளர்ச்சி துரிதம் அடையும் என்றார் மந்திரி.

தமிழ்நாடு அரசு நடத்திய செயற்கை மழை திட்டத்தின் பலன்கள் பற்றி ஆராய நிபுணர்கள் மாநாடு ஒன்றை நடத்த இந்திய விவசாய ஆராய்ச்சிக்கழகம் முன்வர வேண்டும் என்று அவர் கேட்டுக் கொண்டார்.

## நகரத்திற்கு அடியில் நிலக்கரி சுரங்கம்

புதுடெல்லி, ஜன 17—நகரத்திற்கு அடியிலேயே நிலக்கரி தோண்டப்படுகிற அதிசயம், ரஷியாவில் நடந்து வருகிறது.

ரஷியாவின் உக்ரைன் குடியரசில் "தோனடஸ்க்" நகரின் அருகாமையில் ஒரு நிலக்கரி சுரங்கம் இருக்கிறது. நகரின் அடியிலும் நிலக்கரி இருப்பதை நிபுணர்கள் கண்டு பிடித்தனர்.

பூமிக்கு அடியில் நிலக்கரியைத் தோண்டினால்—மேற்புறமாக உள்ள பாறைகள் விழுந்து, குறிப்பாக நகரின் மத்திய சதுக்கம் பூமிக்குள் புதைந்து விடும். எனவே ரஷியா என்ஜினியர்கள் இதற்கென விசேஷ சாதனங்களை தயாரித்தனர். நிலக்கரி தோண்டும்போது அதற்குப் பதிலாக சிறு பாறைகளை அந்த இடத்தில் திணித்து வைத்தனர். இதனால் நிலச்சரிவு எதுவும் ஏற்படாமல் தவிர்க்கப்பட்டது.

# வானொலி

ஞாயிறு, ஜன. 18

**சென்னை-1**

(416.7 மீ)

**காலை:**

5-55 வந்தே மாதரம்
6-05 நாலடியார்
6-10 வந்தனை செய்வோம்
6-25 இன்றைய சிந்தனை
6-30 சபைக் கோயில் (தொடர் நாடகம்)
7-00 தமிழ் மணம்
7-25 செய்தி மலர்
7-45 நகர்வலம்
8-00 சிந்தனைத்துளி
8-20 மதுரை மணி ஐயர் —பாட்டு
9-30 திரைகானம்
9-45 பள்ளுப்பாடுவோமே
10-02 டி.கிட்டப்பா-கோட்டு வாத்தியம்

**பகல்:**

12-02 திரைச் சித்திரம்
12-50 திரைகானம்
1-00 இளைய பாரதம்
1-30 அரிவையர் அரங்கம்
2-10 சிறுவர் சோலை
3-00 —நாடகம் (திருச்சி அஞ்சல்)

**மாலை**

5-00 நாடக முன்னேட்டம்
5-10 பாடற் பயிற்சி
5-20 வாத்திய விருந்து
5-30 தொழிலாளர் நிகழ்ச்சி
6-05 திரைகானம்
6-15 வளரும் தமிழகம்-உரை
7-25 விவசாயிகளுக்கு
8-00 மாயூரம் விஸ்வநாத சாஸ்திரிகள் —சாகித்யங்கள்
8-30 உழவுத் தொழிலாளருக்கு ஊதியம்-உரையாடல்
8-45 இன்னிசை
9-15 வாத்திய விருந்து
9-30 நாதயோகி —இசைச்சித்திரம்
10-30 இசைபட வாழ்வோம்
11-05 ஒலிபரப்பு முடிவு

**சென்னை 2.**

(211.3 மீ)

**காலை**

6-00 வந்தேமாதரம்
7-25 ஒலிக்கதிர்
7-30 கலாரங்கம்
9-05 செய்தி கடிதம் —ஆங்கிலம்
9-10 ஆட்டவிடுபு(தெலுங்கு)
10-00 ஒலிபரப்பு முடிவு

**பகல்**

12-40 மேற்கத்திய இசை
1-05 மேற்கத்திய இசை
1-30 ஒலிச்சித்திரம் —தெலுங்கு
2-30 ஒலிபரப்பு முடிவு

**மாலை**

5-50 திரைமெட்டுக்கள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்
8-15 மேற்கத்திய இசை
9-15 ஸ்பாட் லைட்
9-30 டெல்லி அஞ்சல்
10-00 மேற்கத்திய இசை
11-00 ஒலிபரப்பு முடிவு

**திருச்சி**

(361. மீ)

**காலை**

6-00 வந்தேமாதரம்
6-10 காலைக்கதிர்
6-25 நெறிவிளக்கம்
6-30 விவசாயிகளுக்கு
6-35 சிந்தனைக்கினியவை
7-00 கீர்த்தனஞ்சலி
7-25 பெட்டகம்
8-20 அரசுப்பணிகள்
8-35 வைத்தி ராஜ கோபாலன்—பாட்டு
9-35 திரைகானம்
10-00 பூவையர் பூங்கா
10-30 ஒலிபரப்பு முடிவு

**பகல்:**

12-02 கல்யாணபுதிர் —நாடகம்
1-00 மணிமலர்
1-45 திரைகானம்
2-10 விவசாய அரங்கம்
2-40 திரைகானம்
3-00 நண்பன்—நாடகம்

**மாலை:**

4-05 ஆண்டாங் கோயில் செல்வரத்தினம் டி. ஆர். பாலசுப்பிரமணியம்—நாதஸ்வரம்
5-30 தோட்டத் தொழிலாளர்களுக்கு
6-10 சேவைச் செய்திகள்
6-40 கிராம சமுதாயம்
7-25 விவசாயிகளுக்கு
8-00 இளையபாரதம்
8-30 தபால் பெட்டி
9-15 தகவல் நேரம்
9-30 எளிய குடிசையும் எட்டடுக்கு மாளிகையும —சித்திரம்
10-00 திரைகானம்
10-30 ஒலிபரப்பு முடிவு

சென்னை 1-ல்தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00, 6-00, இரவு 9-00. மாநிலச்செய்திகள் பகல் 12-30, 6-30.

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி: காலை 8-10 12-00 2-00 5-00, 9-00.

விவிதபாரதி:

மாலை 6-15: மனோரஞ்சிதம் இரவு 9-15: "வானவில்" குடும்பத்தொடர் சித்திரம்.

# வீட்டு வைத்தியம்

**தலைவலி, கால் வலி போன்ற சின்னஞ்சிறு நோய்களுக்குக்கூட தற்காலத்தில் டாக்டரிடம் போக வேண்டியிருக்கிறது. அதிகமான பணச் செலவு ஏற்படுகிறது. ஆனாலும் நோய் திரும்ப திரும்ப வருகிறது.**

**இங்கிலீஷ் மருந்து எந்த வித நோயையும் பூரணமாக குணப்படுத்துவதில்லை, ஆனால் நாட்டு மருந்து என்று சொல்லப்படும் சித்தர் மருந்துகள் வியாதியை பூரணமாக குணப்படுத்தும்.**

## மூக்கு

மூக்கில் உண்டாகும் பிணிகள்; (பீனசம் முதலியன)

அநேகருக்கு மூக்கடைப்பு மூக்கில சதை வளர்தல், மூக்கில் துர்நாற்றமுடைய சளி முதலியன உண்டாவதுண்டு. இதனால் உடல் பலவீனமடையும். இந்த வியாதிகளுக்கு மேனாட்டு மருத்துவர்கள் மூக்கினுள் (Puncture) செய்வார்கள். அறுவை சிகிச்சை செய்வார்கள். இவ்விதம் அறுவை சிகிச்சை செய்துகொண்ட பின் பலருக்கு ஆஸ்துமா நோய் தாக்கப்பட்டு வருந்துவதை பார்த்ததுண்டு.

கண்டத்திற்குமேல் தேவலோகமென்றும், கண்டத்திலிருந்து இடுப்பு வரையில் மானிட லோகமென்றும், இடுப்பிலிருந்து பாதம் வரையில் அசுர லோகமென்றும் சொல்வர். இந்தத் தேவலோகத்தைவெகுஜாக்கிரதையாய் காப்பாற்றுதல் வேண்டும். கண்டத்திற்குமேல் அசுர சிகிச்சையான அறுவை சிகிச்சைகளைச் செய்வதற்குமுன் ஆயிரமாயிர முறைகள் யோசித்து செய்யவேண்டும். பிராணன் இருக்கக்கூடிய இடம் கண்டத்திற்குமேல், மேனாட்டுமருத்துவர்களுக்குப் பிராணன் எங்கிருக்கிறதென்பதே தெரியாது. மிகத் தேர்வு பெற்ற தாகச் சொல்லும் அவர்கள் விஞ்ஞானம் இன்னும் அதைக் கண்டுபிடிக்கும் அளவுக்கு வரவில்லை. பிராணன் உடலில்10 (10 Vitalparts) இடங்களிலுள்ளன. அவைகளில் தலையிலுள்ள இடமே மிக உயர்ந்தது. இந்த இடங்களைத் (Vitalparts) தெரியாமல் அறுவை சிகிச்சையை மேனாட்டு மருத்துவர்கள் செய்து உயிரையே மாய்த்து விடுகின்றனர். பிறகு (Operation successful, patient died 'ஆபரேஷன் வெற்றிகரம், ஆனால் ஆள் வைகுண்டம்' என்று சொல்கிறார்கள். இது மாத்திரமா? மனிதன் இறந்து விட்டானா இல்லையாயென்று எப்படி நிர்ணயிப்பதென்று மேனாட்டு மருத்துவ மேதாவிகள் இன்றும் ஆராய்ந்து வருகின்றனர் இது நிலைமை.

ஆகவே, கண்களில், மூக்கில், காதில், கண்டத்தில், தலையில் வரும் பிணிகளுக்கு அறுவை சிகிச்சை தவிர்க்கப்படவேண்டும். கண்டத்திற்கு மேல் வரும் பிணிகளுக்கு தலை உச்சியில் தப்பளங்கள் முதலிய சாதனங்களை கையாண்டால் தக்க பலனைத் தரும்.

டாக்டர் வி. பலராமய்யா

ஐட்ஜ் பங்களா, பாஞ்சாலி அம்மன் கோவில் தெரு, அரும்பாக்கம். சென்னை-26

### மூக்கு பிணிகளுக்கு மருந்து

நசியம்: மாசக்காய் வேண்டிய அளவு வாங்கி ஒன்றிரண்டாய் உடைத்து நன்றாக உலர்த்தி பிறகு தூள் செய்து கலுவத்தில் மைப்போல் அரைத்து புட்டியில் அடைக்கவும். இதில் ஒரு சிடிகை மூக்குப்பொடி போடுவது போல் மூக்கில் இழுக்கவும், கொஞ்ச நேரம் கழித்து தும்மல் வரும். மூக்கில் கண்களிலிருக்கும் கொடிய நீர்கள் வெளிவரும். இதை நாள் ஒன்றுக்கு ஒரு முறையாவது மூக்கடைப்புப் போகிறவரையில் உபயோகிக்கவும்.

மற்றொரு முறை:- (ஆக்கிராணப் பொடி

| | |
|---|---|
| பீதரோகிணி சூர்ணம் | 2 கிராம் |
| பச்சைக் கற்பூரம் | 2 ,, |
| அரத்தை சூரணம் | 2 ,, |
| வால்மிளகு சூரணம் | 2 ,, |
| புலாங்கிழங்கு சூரணம் | 2 ,, |
| அக்கரா சூரணம் | 2 ,, |
| ஏலம் சூரணம் | 2 ,, |
| நன்றாக வறுத்தெடுத்த துருசுப் பொடி | 2 ,, |
| நெற்றியிலிடும்விபூதி | 5 ,, |

எல்லாவற்றையும் மைப்போல் நுணுக்கி சீசாவில் வைத்துக்கொண்டு வாரத்திற்கு மூன்றுமுறைமூக்கினுள் நசியமிடவும். தும்மல் அதிகமாய் வந்து மூக்கில், கண்ணில், கண்டத்திலிருந்து சளி வெளிப்படும். மேற்சொன்ன நேத்திர மூலித் தைலமும் உபயோகிக்கவும்.

மேற்சொன்ன நேத்திர மூலி தைலம் அடிக்கடி உபயோகித்து பயனைக்காணலாம்.

### தலைக்குத் தப்பளம்

வில்வ இலை கைப்பிடி எடுத்து மிளகு ஒரு தேக்கரண்டி சேர்த்து பசும்பால் விட்டரைத்து தலையின் உச்சியில் போட்டு ஒரு மணிநேரம் இருக்கச் செய்து பிறகு இளவெந்நீரில் குளிக்கவும்.

இந்தத் தப்பளத்தால் கண், காது, மூக்கிலுண்டாகும் பிணிகள் நீங்குவதல்லாமல் காமாலை, சோகை முதலிய பிணிகளும் நீங்கும், இது கைகண்டது.

நேத்திரமூலித் தைலத்தை வாரத்திற்கு இருமுறை தலைக்குத் தேய்த்துக் குளித்து வந்தால் நாசி, கண், காது, கண்டங்களில் உண்டாகும் எந்தப் பிணிகளும் வராது. வந்தாலும் இந்தத் தைலத்தால் குணமாகும். மூக்கிலும் இந்தத் தைலத்தை விடுவது நல்லது.

தலைக்கு தைலம் பீனசம் நீங்கும்)

| | |
|---|---|
| வெத்திலை சாறு | ½ லிட்டர் |
| இஞ்சிரசம் | ½ ,, |
| ஆகாசத்தாமரை சாறு | ½ ,, |
| நல்லெண்ணெய் | 1½ ,, |

சேர்த்துக் காய்ச்சி தைலம் செய்து தலை முழுகவும் வாத நீர், பித்த நீர் முதலானது நீங்கும்,

### மூக்கில் இரத்தம் வருவதற்கு மருந்து

வெள்ளாட்டுப் பால், தேன், சர்க்கரை மத்தித்து மூக்கினுள் விடவும் உடனே நிற்கும்.

### மற்றொரு முறை

பொரித்த படிகாரத்தை தண்ணீரில் கரைத்து மூக்கில் விடவும். உடனடியாக சிகிச்சை செய்யவேண்டிய நிலைமை யேற்பட்டால் படிகாரத்தை அப்படியே பொடித்து தண்ணீரில் கலக்கி மூக்கில் விடலாம். வாயினுள் போகுமானால் உடனே வாயை கொப்பளித்து விடவேண்டும்,

# சென்னை டாக்டர் சாதனை 25 வயது பெண்ணுக்கு மாற்று சிறுநீரகம்

**சென்னை, ஜன. 17—மாற்று சிறு நீரகத்தை 25 வயது பெண் ஒருவருக்கு வெற்றிகரமாகப் பொருத்தி சென்னை டாக்டர்கள் சாதனை புரிந்துள்ளனர்.**

கடந்த 12-ம் தேதிசென்னை பூந்தமல்லி நெடுஞ்சாலையில் உள்ள கே. ஜே. ஆஸ்பத்திரியில் லலிதா என்ற பெண்ணுக்கு இவ்வாறு சிறுநீரகம் பொருத்தப்பட்டது.

இந்தியாவிலேயே வேலூர் சி. எம். சி. மருத்துவமனைக்கு வெளியே வேறொரு மருத்துவமனையில் இவ்வாறு ஒருவருக்கு சிறுநீரகம் பொருத்தப்பட்டிருப்பது இதுவே முதல் தடவையாகும்.

டாக்டர் ஜெகதீசன், டாக்டர் விஸ்வேஸ்வரன் ஆகியோர் தலைமையில் 9 டாக்டர்கள் லலிதாவுக்கு மாற்று சிறு நீரகத்தை வெற்றிகரமாகப் பொருத்தினார்கள். "மாற்று சிறுநீரகம் பொருத்தப்பட்ட பிறகு லலிதா சகஜமான முறையில் சிறுநீர் கழிக்கத் தொடங்கினர். அவர் அநேகமாக சகஜ உணவை இப்போது உட்கொள்கிறார்" என்று டாக்டர்கள் கூறினர்.

லலிதாவுக்குத் திருமணம் ஆகிய பல வருடங்களுக்குப் பிறகு அவர் கர்ப்பம் தரித்தார். ஏழாவது மாதத்தில் அவருக்கு கருச்சிதைவு ஏற்பட்டது, பிறகு அவருடைய சிறுநீரகம் வேலை செய்யத் தவறியது. அவருக்கு இருதய துடிப்பு நின்றுவிடக் கூடிய அபாயம் ஏற்பட்டது. நினைவிழந்த நிலையில் அவர் சென்ற அக்டோபர் மாதத்தில் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார்.

அவருக்கு செயற்கை சிறுநீரகம் பொருத்தப்பட்டது: வாழ்நாள் முழுதும்ஒவ்வொரு வாரமும்இருமுறைசெயற்கை நீரகம் பொருத்தப்பட வேண்டிய நிலை உருவாகியது, இதனால் வாரம் ரூ. 1500 செலவிட வேண்டிவரும்.

லலிதாவுக்கு மாற்று சிறுநீரகம் பொருத்த டாக்டர்கள் முடிவு செய்தனர்.

லலிதாவின் அத்தை சுலோசனா (வயது 40) என்பவர் சிறுநீரகம் அவருக்கு ஏற்றதாக இருக்கும் என்று கண்டுபிடிக்கப்பட்டது.

இம் மாதம் 12ஆம் தேதி சுலோசனாவின் சிறு நீரகத்தை லலிதாவுக்கு பொருத்தும் அறுவை சிகிச்சை நடைபெற்றது

11 டாக்டர்களும் 5 நர்சுகளும்கொண்ட இருகுழுவினர் 5 மணி நேரம் அறுவை சிகிச்சை செய்தனர்.

மாற்று சிறுநீரகம் பொருத்த ரூ. 85 ஆயிரம் வரை செலவாகும். ஆனால், லலிதாவினால் அந்த அளவிற்கு பெருந்தொகை செலவு செய்யமுடியாத நிலையில் இருந்ததால் டாக்டர்கள் இலவசமாக மாற்று சிறு நீரகத்தைப் பொருத்தினர்.

லலிதாவும், சிறுநீரகம் வழங்கிய அவரது அத்தை சுலோசனவும் தேறி வருகின்றனர்.

# இந்திராவுக்கு ஆதரவு: ஷேக் அப்துல்லா அறைகூவல்

ஸ்ரீநகர், ஜன. 17—பிரதமர் இந்திரா காந்தியின் தலைமைக்கு முழு ஆதரவு அளிக்க மக்கள் முன்வர வேண்டும் என்று காஷ்மீர் முதலமைச்சர் ஷேக் அப்துல்லா கேட்டுக் கொண்டார்.

# "தயவுப் பெரு நெறி"

(சுவாமி சரவணனந்தா)

(அருட்பிரகாச வள்ளலார் காட்டிய சமரச சுத்த சன்மார்க்க கொள்கை விளக்கம்)

## 184 தயவு ஒளியில் அருட்பெருஞ்ஜோதி அகவல் விளக்கம் (164)

327. வெருள்மன மாயை வினையிருள் நீக்கியுள்
328. அருள் விளக்கேற்றிய அருட்பெருஞ் ஜோதி

அறியாமை இருளிலே துன்பப்பட்டுழலும் மனம் சதா கவலையும், அச்சமும், கலக்கமும் அடைந்து துன்பமே வாழ்வாய்க் கொண்டுள்ளது. இம்மனே மனிதனுக்கு உண்மையை விளங்குவதில்லை. தன்னையும் தன்னைச் சூழவுள்ள பிரபஞ்சத்தையும், இப்பிரபஞ்ச காரியத்தின் உண்மையும் அறிந்து கொள்ளப்படுவதில்லை. இந்த மனிதன் அபக்குவ மனோ அறிவில் அவ்விசாரம் செய்து கண்டவை; தான் ஒரு தற்சுதந்தரமற்ற ஆன்மப்பசு எனவும், தான் வினையால் கட்டுண்டு, மாயையில் கிடப்பதாகவும் உணர்கின்றான். இவன், பதியின் அருளைப் பெற்று, பாச வினையை களைந்து விட்டு, பதி ஐக்கிய முற்றிடல் வேண்டுமெனவும் எண்ணிக் கொண்டிருக்கின்றான். வேதாந்தம், சித்தாந்தம் யாவுமே, மாயாகன்ம உடலை விட்டு நீங்குவதுவே முத்தி முடிவாகக் கொண்டிருக்கின்றன. இந்த அழிந்து ஒழியும் கூற்றெல்லாம் மனிதனை வெருளச் செய்வன வேயாம் உண்மைகொண்டு அமைதியும் ஆனந்தமும் பெற்று வாழச் செய்யவல்லது நம் அருட்பெருஞ்ஜோயேயாம்.

நமது அருட்ஜோதி பதி பதி நமது உள்ளத்திலே அருள் விளக்கை ஏற்றி என்றும் அவியாது அணையாது ஒளிரச் செய்கின்றதாம். இந்த அருள் விளக்கின் ஆற்றல், அக இருள் நீக்கி ஆனந்த வாழ் வருளும் பெருஞ் செயல் திறன, உலகியற் ஜோதி எதற்குமே இல்லை எனலாம் இது, இருளை நீக்கி மன மருட்கியை அறியாமையைப் போக்குகின்றது; உண்மை எல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கச் செய்கின்றது.

மாயை, வினை, இருள் இம்மூன்றும் முன்னோர் கருத்துப்படி, மாயை, கன்மம், ஆணவம் எனும் மும்மலங்களாய் இருந்தன. இப்போது, அருட்பெருஞ்ஜோதியின் அம்சமான அருள் விளக்கு ஏற்றப்பட்டதால், அதுவே நம் ஆன்மாவாய் அறிந்து கொள்ளலாகின்றது; அப்பதியே தன் அருளால் இப்படி ஆன்மாவாய், தோகாதி பிரபஞ்சத்தோற்றக் காரியப்பாடாய் தெளியலாகின்றனவாம். இதனால் யாவும் அருள் ஒளியே அன்றி நாம் என்றோ பிறர் என்றோ, பிற பொருள் என்றோ செயலென்றோ வேறு எதுவும் இல்லை என அறிகின்றோம். இவ்வறிவு கொண்டு, சுத்த சன் மார்க்கத்தால், சுத்த மாதி முத்தேக வாழ்வு பெற்று விளங்க நேருவதாம். முன்னெறி எதனாலும் பெறற்கரிய பேரின்ப சித்திப் பெருவாழ்வு இம்முறையால் கிடைப்பதாகும்.

(தொடரும்)

# பிரதமருக்கு பதில்: கருணாநிதி தரும் புள்ளி விவரம்

**சென்னை, ஜன 17—தமிழ்நாட்டில் செலவழிக்கப்படும் நபர்வாரி திட்டச் செலவு அதிகமே என்று முதலமைச்சர் கருணாநிதி கூறியுள்ளார்,**

சென்னையில் பிரதமர் இந்திரா காந்தி வெளியிட்ட கருத்துக்களுக்குப் பதிலளிக்கும் வகையில் கருணாநிதி நேற்று ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார்.

மத்திய அரசு ஏதும் செய்யவில்லை என்று தாம் கூறவில்லை என்றும், ஆயினும் நம் தேவைகளை மத்திய அரசுடன் வாதாடிப் பெறுவது தகராறு என்று கருதக் கூடாது எனறும் கருணாநிதி அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

புள்ளிவிவரங்களை விளக்கி கருணாநிதி அந்த அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

இந்தியப் பிரதமர் நாடாளுமன்றத்தில் பேசும்போது நபர்வாரி திட்ட ஒதுக்கீடு—அனைத்து இந்தியாவிலும் தமிழ்நாட்டில்தான் குறைவாகஉள்ளது என்று கூறினர். ஆனால் சென்னையில் அவர்கள் பேசும்போது 1974-75-வது ஆண்டின் திருத்திய மதிப்பீடுகளை ஒப்பிட்டுப் பார்த்தால் தமிழ்நாட்டில் நபர்வாரி திட்ட மதிப்பீடு, ரூ. 36 ஆகவும், அனைத்து இந்திய சராசரி ரூ. 51 ஆகவும் இருப்பதாகச் சுட்டிக்காட்டி இருக்கிறார்.

நான் முதலிலேயேசொன்னபடி நடப்பு நிதி ஆண்டில், அதாவது 1975-76ல் திட்டக் குழுவால் நமக்கு ஒப்புதல் அளிக்கப்பட்டது ரூ. 142 கோடி. என்றாலும் நமது மொத்தத் திட்டச் செலவு ரூ. 165 கோடிக்குக் குறையாமல் இருக்கும். இதை நபர் வாரி முறையில் பார்த்தால் ரூ. 41 ஆகும். இதில், நடப்பு ஆண்டில் திட்டத்துக்காக மத்திய அரசிடமிருந்து தமிழ் நாட்டுக்குத் தருவதும். தருவதாகக் கூறியிருப்பதும் நபர் வாரியாக 14 ரூபாயாகும். மீதமுள்ள நபர்வாரியான 27 ரூபாய். மாநில அரசின் பொறுப்பாகும். மேற்குறிப்பிட்ட மத்திய அரசு உதவியான 14 ரூபாயில் 70%கடன் 30% மானியம்.

### மதுவிலக்கால் பாதிப்பு

தமிழ்நாட்டில் பூரண மதுவிலக்கு கொண்டுவரப்பட்ட காரணத்தில நமக்கு நடப்பு நிதி ஆண்டில் ரூ. 56 கோடி வருவாய் குறைந்தது.

வரலாறு காணாத வறட்சியை நாம் சமாளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டதால் நமக்கு எதிர்பாராத அளவில் 24 கோடி ரூபாய் செலவு ஏற்பட்டது.

இந்த 56 கோடி ரூபாய் இழப்பும் 24 கோடி ரூ. அதிகச் செலவும் இந்த ஆண்டில் நம்முடைய ஆண்டுத் திட்ட அளவையும் பாதித்துள்ளது. இந்த 80 கோடி ரூபாய் இழப்பால் திட்டச் செலவு நபர் ஒன்றுக்கு ரூ. 20 குறைந்து விட்டது. இந்த இழப்பை மத்திய அரசு நம்முடைய கோரிக்கைகளை ஏற்று ஓரளக்காவது சரிக்கட்டியிருந்தால் நமது நபர் வாரி திட்டச் செலவு அனைத்திந்திய சராசரியைவிட அதிகமாகியிருக்கும். பூரண மதுவிலக்குக் காரணமாகவும், வறட்சியால் ஏற்பட்ட செலவின் காரணமாகவும் தமிழ்நாட்டிற்கு மத்திய அரசின உதவி வேண்டுமென்று நான் பலமுறை நேரில் கேட்டும் கடிதங்கள் எழுதியும் நமக்கு எந்தப்பயனும் கிடைக்கவில்லை,

### தமிழக வாதம்

எனவே நபர்வாரி திட்டச் செலவு குறைவதற்குக் காரணம் மத்திய அரசு நமது முக்கியக் கோரிக்கைகளுக்கு இணங்காததுதானே தவிர நாம் அல்ல என்பது இதிலிருந்து தெளிவாகும். மத்திய அரசிடம் தமிழ்நாடு அரசு கோரிய தொகையை திட்டத்தில் நமக்கு வழங்காமையினால்தான் நபர்வாரித்திட்டச் செலவு குறைவாகஇருக்கிறது என்று நாம் வாதாடி வருவதைத்தான் இப்போது பிரதமர் ஒப்புக் கொண்டிருப்பதாக நான் கருதுகிறேன். ஒரு மாநிலத்தை முன்னேறிய மாநிலங்களின் வரிசையில் சேர்த்துவிட்டு திட்டத் தொகையையும் குறைக்கிறபோது அந்த மாநிலத்தின் மக்கள் தொகை அப்படியே இருக்கிறது அல்லது பெருகுகிறது என்பதையும், அந்த மக்கள் தொகையால் வகுத்துப் பார்க்கிறபோது நபர்வாரி திட்ட ஒதுக்கீடு குறைகிறது என்பதையும் நாம் நன்றாகப் புரிந்து கொள்ளலாம்.

வளர்ச்சிப் பணிகளுக்குச் செலவிடும் தொகைகளைக் கணக்கிடும்போது திருப்பிக் கொடுக்கும் கடன் தொகைகளையும், வட்டியையும் மொத்தச் செலவிலே இருந்து கழிப்பது சரியல்ல என்று வாதிடப்பட்டாலும் அந்த இனங்கள் நமது அரசியல் சட்டத்தின் அடிப்படையில் சாட்டிய இனங்கள்(Charged) ஆகும்.

### தமிழ்நாடு

ரிசர்வ் வங்கியின் அறிக்கையின்படி தமிழ்நாட்டின் 1975-76-ஆம் ஆண்டின் மொத்த பட்ஜெட் 579.26 கோடி ரூபாய் ஆகும், இதில் வளர்ச்சித் திட்டங்களுக்காகச் செலவிடப்படுவது 388.83 கோடி ரூபாய். வளர்ச்சிப் பணி அல்லாதவைகளுக்கு 175.44 கோடி ரூபாய். ஊராட்சி மன்றம். மற்றும் கிராமப் பஞ்சாயத்து நிறுவனங்களுக்கு நமது மாநில அரசு கொடுக்கும் மானியம் 14.99 கோடி ரூபாய்.

எனவே மொத்த வளர்ச்சிப் பணிகளுக்காக, ஊராட்சி மன்றத்திற்கு அளிக்கும் மானியம் உட்பட 403.82 கோடி ரூபாய். தமிழக அரசு 1975 76-ஆம் ஆண்டில் செலவழிக்கிறது. இந்தத் தொகையை தமிழ் நாட்டு மொத்த மக்கள் தொகையான 4 கோடியே 11 இலட்சத்தால் வகுத்துப் பார்த்தால் நபர்வாரி வளர்ச்சிப் பணிகளுக்கான செலவு 98.25 ரூபாய் ஆகும்.

நபர்வாரி வளர்ச்சிப் பணிக்கான செலவு என்பது அந்தந்த மாநிலத்தினுடைய மக்கள் தொகையால் வகுத்துப் பார்க்கிற ஒன்றாகும். எனவே நாம் ஒப்பிட்டுக் காட்டிய வகையில் 1975—76ஆம் ஆண்டில் ரிசர்வ் வங்கியின் அறிக்கையின்படி மேற்கு வங்கம் 88.74 ரூபாயும், உத்திரப் பிரதேசம 76.32 ரூபாயும், தமிழ்நாடு 98.25 ரூபாயும், நபர்வாரியாக வளர்ச்சிப் பணிகளுக்குச் செலவிடுகிறது என்பது விளங்கும். குறைந்த மக்கள் தொகை கொண்ட மாநிலங்கள், திட்ட ஒதுக்கீடுக்காக அனுசரிக்கப்படும முறைகளால் சில சிறப்புப் பயன்களைப் பெறுகின்றன என்பதை மறந்துவிடக் கூடாது.

மேற்கண்டவாறு கருணாநிதி தெரிவித்துள்ளார்.

### சிலைகள்

நினைவுச்சின்னங்கள், சிலைகள் குறித்து பிரதமா கூறியிருப்பதற்குக்கருணாநிதி பதிலளிக்கையில் நினைவாலயங்களுக்காக கடந்த 9 ஆண்டுகளில் தமிழகம் ரூ 1 கோடி செலவழித்திருக்கும் என்று தெரிவித்தார்.

இந்த 9 ஆண்டுகளில் பல இனங்களுக்காகவும் மொத்தம் ரூ 4 ஆயிரத்து 750 கோடி செலவிடப்பட்டிருப்பதைக் கவனித்தால் ரூ 1 கோடி அதிகம் அல்ல எனபது தெரிய வரும் என்று கூறினார்.

# வெள்ளைக்கார ஜோடிக்கு இந்து முறைப்படி கல்யாணம்

சென்னை, ஜன. 17—பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஒரு காதல் ஜோடிக்கு வி. ஜி. பி. நிறுவனத்தார் நேற்று இந்து முறைப்படி சிறப்பாக கல்யாணம் நடத்திவைத்தனர்.

சென்னைக்கு அருகே ஈஞ்சம் பாக்கம் கிராமத்திலுள்ள வி. ஜி. பி. தங்கக் கடற்கரையில் செங்கல்பட்டு மாவட்ட பொங்கல் சுற்றுலா விழா நேற்று மாலை கொண்டாடப்பட்டது.

சென்னைக்கு வந்துள்ள பிரெஞ்சு காதல் ஜோடியான டானியல், இன்கிரிட் ஆகியோருக்கு அப்போது இந்து முறையில் திருமணம் நடந்தது. மாவட்ட கலெக்டர் திவான் முகமது தாலி எடுத்துக் கொடுக்க இன்கிரிட் அம்மையாரின் கழுத்தில் டானியல் தாலி கட்டினார். அப்போது கெட்டி மேளம் முழங்கியது. மணமகன் பட்டு வேட்டியும். மணமகள்பட்டுச் சேலையும் உடுத்தியிருந்தனர்.

சிலம்பும், புலிவேஷம் பொய்க்கால் குதிரை, நாட்டியம் முதலியவைகளுடன் மணமக்கள் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர்.

இறுதியில் நடந்த விழாவில் வி. ஜி பன்னீர்தாஸ் அனைவரையும் வரவேற்றார். கலெக்டர் திவான் முகமது தலைமை வகித்தார்.

ஆங்கண்ணல் எம்.எல்.ஏ., மலசிய விளையாட்டு வீரர் சுந்தரம்! உமாபதி ஆகியோர் பேசினார்கள்.

# வார ராசி பலன்

## ஜோதிடர் திலகம் கம்பிக்குடி சந்திர போஸ்

'நவமணி' ஜோதிடர்

31A. நான்பாளையம் 3-வது தெரு, மதுரை-9.

**(17—1—1976 முதல் 23—1—1976 முடிய)**

### மேஷம்

(அசுவனி, பரணி, கிருத்திகை 1ம் பாதம்)

ராசிநாதன் செவ்வாய் இந்த வாரம வக்கிர நிவர்த்தி அடையப் போவதுடன் 21-ந் தேதிக்குமேல் கேதுவும அதிக பலம பெறுவதால், வாரக் கடைசியில் கவலை மாறும, நம்பிக்கைதரும சூழ்நிலை ஏற்படும. தனஸ்தான அதிபதி சுக்கிரன் வக்கிரம பெற்று நிற்கும. புதன் சாரத்தில் இருப்பதால், பணக்கவலைகள் வார முற்பகுதியில் அதிகரிக்கும. வாரக் கடைசி நாட்களில் பணம எப்படியும கைக்கு வந்துவிடும. தொழில் மற்றும உத்தியோகத் துறையில் இருப்போருக்கு புதிய உற்சாகம ஏற்படும. தொழிலாளர்களுக்குள் உதவி ஏற்பட்டுக் கொண்டுவரும, வியாபாரத்தில் ராகுவின் போக்கு சிலவினங்களைக் கொண்டுவந்தாலும, பாதிக்காது. குடுமபத்தில் கணவர் மனைவிக்குள் ஒற்றுமை பாதிக்காது. ஆதரவு உண்டாகும. வெளியூர் பிரயாணகாரியங்களில் புதன் வக்கிரப் போக்கில் இருப்பதால் 21-ந் தேதிவரை தேக்க நிலையே தலைதூக்கும. நண்பர்கள் சமபநதமான காரியங்களில் உழைப்பீர்கள்,

### ரிஷபம்

(கிருத்திகை 2,3,4 ரோஹிணி, மிருகசிரிஷம், 1, 2-ம் பாதம்.

ராசிநாதன் சுக்கிரனும, ராசியில செவ்வாயும, வாரக் கடைசியில் 21-ந் தேதிக்கு மேல் சிறப்பாக சஞ்சரிக்கின்றார்கள். அதுவரை பல இடையூறுகளை சொந்தக் காரியங்களில் சமாளிப்பீர்கள். உடல் நலம அடிக்கடி சீர்கெட்டாலும உடன் குணமுண்டாகும. தனதிபதி புதன் வக்கிரப்போக்கில் சூரியனுடன் காணப்பட்டு சனியும வக்கிரத்துடன் பார்ப்பதால், பண சமபந்தமான முயற்சிகளில் தடங்கல்கள் தலை தூக்கி பண வசதியை பாதிக்கும கடன் வாங்கவேண்டிய சந்தர்பபங்களில் வெற்றி உண்டு தொழில் துறையில் உழைப்பு மிகுந்த வாரமாகும. வியாபாரத்தில் சுக்கிரன் போக்கு 21-ந் தேதி வரை சிறப்பாக அமையாததால் அது வரை மந்த நிலையே தலைதூக்குமாயினும பின் நன்மை உண்டு. குடுமபத்தில் சில்லரை பூசல்கள் தலைதூக்கி மறையும வெளியூர் காரியங்களில் உழைப்பு மிகுந்த காரியதாமதம காட்டும. சாதாரண வாரம.

### மிதுனம்

(மிருகசிரிஷம் 3,4-ம் பாதம். திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3ம் பாதம்)

ராசி அதிபதி புதன் எட்டாமிடத்தில் வக்கிரம் பெற்று, சனியின் பார்வை கொடுப்பதால் உறவினர் சம்பந்தமான காரியங்களில் வீண் அபவாதம் காட்டக் கூடியது. பணத் தொல்லை அதிகரித்துக் கொண்டே போகுமாயினும் வாரக் கடைசியில் ஓரளவு நிலைமை சீர்திருந்தும்தொழில் உத்தியோகம் போன்ற துறைகளில் வியாழன், இந்த வாரம் வெகு விசனத்துடன செல்வதால் எதிலும் பற்று இருக்காது. எதிரிகள் தலைதூக்குவர். வியாபாரம்சுமாராகவே நடக்கும் கணவர்மனைவிக்குள் குடும்பத்தில் காரணமற்ற கருத்து வேறுபாடுகள் தலைதூக்கி மறையும். வெளியூர் பிரயாண காரியங்களைப் பொருத்து அதிக முயற்சியின் மேல் காரியா அனுகூலத்தை பெறுவீர்கள், சிலருக்கு உத்தியோகத்தில் வெளியூர் மாற்றல் உத்திரவு கிடைக்கும்படி அமையும். வழக்கின் போக்கு சாதகமற்ற நிலையில் 21ந் தேதி வரை இருக்கும் அதன் பிறகு வெற்றிகிட்டும்.

### கடகம்

(புனர்பூசம் 4-ம் பாதம் பூசம் ஆயில்யம்)

ராசியில் சனியின் வக்கிரப் போக்கு, புதனின் பார்வையால் அதிக பலஹீனம்பெறுவதால், எதிர்பார்க்கும செய்திகள்தாமதிக்கும்.விரைவில் நடக்க வேண்டிய காரியங்கள் காலாகாலத்தில் நடக்காது. பணக்கவலைகள்மாறும் எப்படியும பிறர் ஒத்துழைப்புடன் காரியம கைகூடும. பண சமபந்தமான முக்கிய ஒப்பந்தங்கள் தாமதித்தாயினும வெற்றிகரமாகமுடியும. தொழில், உத்தியோகம போன்ற சூழ்நிலைகளில் 21-ந் தேதிக்குமேல நமதக்கைதரும சந்தர்ப்பங்களும், அபிவிருத்தியும மேலிட்டது ஆதரவும காட்டும. வியாபாரம திட்டமிட்டபடி நல்லபடியாகவே நடக்கும, கணவர் மனைவிக்குள் சூரிய, புதன் சேர்க்கையால் மனக்கவலைகள் தலைதூக்குமாயினுமஉடன்யாவும நல்லபடியாகமாறும. வேண்டிய உறவினர் காரியங்களில் உழைப்புமிகுதியாகக் கொண்டிவரும. வழக்கில் படிப்படியாக இனி அபிவிருத்தி உண்டாகும.

### சிம்மம்

(மகம், பூரம், உத்திரம் 1-ம் பாதம்.)

ராசி நாதன் சூரியன் சுய சாரத்தில் ஆறுமிடத்தில் உன்னத பலன் பெற்ற சொல்வதால் எதிர்ப்புகளின்வெற்றி உங்களுக்கே தன அதிபதி புதன் பலம் குறைந்தாலும். சுந்திரன் அநுகூலமாகசஞ்சரிப்பதால் எப்படியும் பணம் கைக்கு வந்துவிடும். கட்டுப்படுத்த முடியாத சிலவினங்களும் தலை தூக்கும். தொழில் உத்தியோகம் போன்ற துறைகளில் செவ்வாய் 21-ந் தேதி வக்கிரம் நீங்கிய பின் நன்மைகள் அதிகரிக்கும், அதற்குள் உழைப்பும், வேலையில் உற்சாகமின்மையும் தலைதூக்கும். வியாபாரத்தில் செலவுகள் கட்டுக்கடங்காமல் போகுமாயினும் சமாளித்து விடுவீர்கள். குடும்பத்தில் கணவர் மனைவிக்குள் சிறுமனஸ்தாபங்கள் தலைதூக்கி மறையும், வெளியூர் பிரயாண காரியங்கள் சுக்கிரன் 21-ந் தேதி தனுசு ராசிக்கு மாறிய பின் வெற்றியை கொடுக்கும்.

### கன்னி

(உத்திரம் 2, 3, 4 அஸ்தம் சித்திரை 1,2-ம் பாதம்)

ராசிநாதன் புதன் ஐந்தாம் இடத்தில் வக்கிரம் பெற்று இருந்தாலும வியாழன் ராசியைஉன்னதபலம்பெற்று பார்ப்பதால் தாமதித்தாகிலும் எடுத்த முயற்சிகளில் நன்மை வராமல் போகாது. பணவசதி ராகுவும் வியாழனும் சிறப்பாக இருப்பதால் எப்படியும் பணம் கையில் வந்தாலும் கட்டுப்படுத்த முடியாதசிலவினங்களால் கையில் தங்காது. தொழில் உத்தியோகம் போன்ற துறைகளில் திருப்தியற்ற போக்கே தென்படுமானாலும், 21-ந் தேதி சுக்கிரன் தனசுக்கு மாறிய பின் அபிவிருத்தியுடன் மன நிம்மதி காட்டும், வியாபாரத்தில் வியாழன் பலம் பெற்றாலும் சாரகதி அநுகூலமற்றுக காண்பதால் லாபம் எதிர்பார்த்தபடி அமையாது கணவர் மனைவிக்குள் குடும்ப ஒற்றுமை ஓரளவு பாதித்தாலும் வாரக் கடைசியில் நன்மையாக முடியும் வெளியூர் பிரயாண காரியங்களில் 21-ந் தேதி வரை தடங்கல்களும் முயற்சியில் ஊக்கமின்மையும் காட்டும அதன் பிறகு அநுகூலமுண்டு உறவினர் சுப காரியங்களில் பங்கெடுத்துக் கொள்வீர்கள்.

### துலாம்

(சித்திரை 3,4-ம பாதம் சுவாதி, விசாகம் 1, 2, 3-ம் பாதம்)

ராசி அதிபதி சுக்கிரன் இதுவரை வக்கிர கிரகசாரத்திலேயே செல்லுதால், யூகமாக செயல்பட்ட காரியங்களில் முடிவு திருப்திகரமாய் இருக்காது. சுக்கிரன் 21-ந்தேதிராசி மாறும, அதே நாளில், செவ்வாயும வக்கிரம நீங்கி விடுவதால், பணக் கவலைகள் அதன் பிறகு மாறும. எதிர்பார்த்த இடத்திலிருந்து பணமவரும். தொழில் உத்தியோகம போன்ற துறைகளில் சனியின் வக்கிரப் போக்குடன், புதன் வக்கிரம பெற்று பார்ப்பதால், உழைப்பு மிகுந்து கொண்டே போகும். விடுமுறையில் போக வேண்டிய அவசியத்தை கொண்டுவரும். வியாபாரம் கேதுவின்போக்கு சிறப்பாக இருப்பதால் நல்ல லாபத்தைக் கொண்டுவரும். செவ்வாய் 21-ந் தேதி பலம் பெற்றபின, பழைய பாக்கிகள் வந்துசேரும். கணவர் மனைவிக்குள் அனபு மிகுந்து ஆதரவு பெருகும். வெளியூர் பிரயாண காரியங்கள் சுக்கிரன வாரக் கடைசியில் ராசி மாறியபின நனமையாக முடியும். திருமணம்போனற சுபகாரியங்கள் வேண்டியவர்களுக்கு இனிது முடியும்.

### விருச்சிகம்

(விசாகம் 4-ம்பாதம் அனுசம், கேட்டை

ராசிநாதன் செவ்வாய் பலம குறைந்து அமைய ராசியில் சுக்கிரனும அஷ்டமாதிபதி புதன் சாரத்திலேறி பல ஹீனம பெறுவதால் எதிர்ப்புகள் தலைதூக்கும, கடன் தொல்லைகள் கட்டுக்கடங்காமல் போகும என்றாலும 21-ந் தேதி சுக்கிரனும, செவ்வாயும பலமபெறுவதால், காரியங்களில் இதுவரை இருந்த எதிர்ப்புகள் மறையும, பண வசதி அதன் பிறகு அதிகரிக்கும. தொழில் உத்தியோகம போன்ற துறைகளில், மேலதிகாரிகளின் ஆதரவு உண்டாகும. வேலையில் புதிய ஆர்வம உண்டாகும். வியாபாரத்தில் 21-ந் தேதிக்குமேல் படிப்படியாக முன்னேற்றம உண்டாகும. கணவர் மனைவிக்குள் அடிக்கடி வாக்குவாதங்கள் நிகழுமென்றாலும, வாரக் கடைசியில் நிலைமை திருந்தும. தம்பதிகளின் உடல்நலம மேலசாக பாதித்து குணமுண்டாகும. வெளியூர் பிரயாண காரியங்களில் நன்மை உண்டாவதுடன் வேலை தேடுவோருக்கு பேட்டிக் கான உத்திரவுகள் கிடைக்கும.

### தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம், 1-ம் பாதம்)

ராசி நாதன் வியாழன் சுகஸ்தானத்தில்,புதன் சாரத்தில் அமைய காரணமற்ற குடும்பக் கவலைகள் தலைதூக்கும. கைக்கு எட்டியும வாய்க்கு எட்டாத போக்கு இருப்பதால், முயற்சிகளில் மந்த நிலையே தலைதூக்கும். தனஸ்தனத்தில் சூரியன் பலம பெற்றாலும, சனியும, புதனும பலம குறைந்திருப்பதால பணக் கவலைகள் கடன் தொல்லைகளும தலைதூக்குமாயினும வாரக் கடைசியில் சுக்கிரன ராசிக்கு மாறியபின் கவலைகள் மறையும தொழில் உத்தியோகம போன்ற துறைகளில் வேலைகள் விரைவில் முடியாது, தொழில் துறையில் பழைய ஒப்பந்தங்களில் தேக்க நிலை உண்டாக்கும். வியாபாரத்தில், சுமாரான பலன்களே இருப்பதால் திருப்தியற்ற சூழ்நிலை வாரக் கடைசிவரை நீடிக்கும குடுமபத்தில் மனநிமமதி ஓரளவு பாதித்தாலும யாவும வாரக் கடைசியில் மாறும. வெளியூர் பிரயாண காரியங்களில் தாமதத்தே காரியங்கள் நடைபெறும சாதாரணமான வாரம.

### மகரம்

(உத்திராடம் 2,3,4-ம் பாதம் திருவோணம், அவிட்டம் 1, 2-ம் பாதம்.)

ராசியில், புத ஆதித்திய யோகம வெகு அழகாக இருந்தும காரணமற்ற மனப்பீதியும, கட்டுப்பட்டு நிற்கவேண்டிய சந்தர்ப்பங்களையும கொண்டுவரும, கிடைக்கும செய்திகள் மன நிமமதிதராவிடினும, பாதிக்காது பணத் தட்டுப்பாடு தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கும கடன் வாங்க வேண்டிய அவசியத்தையும கொண்டுவரும. தொழில், மற்றும உத்தியோகத்துறையில் ராகுவுடன் சுக்கிரனும இந்த வாரமபலம பெறப்போவதால், உற்பத்தி பெருகும. தொழில்துறையில் புதிய முயற்சி வெற்றிபெறும பழையபாக்கிகள் மறையும். வியாபாரத்தில் சனியின் வக்கிரப் போக்குடன், சந்திரனும பலஹீனமாக சஞ்சரிப்பதால், திருப்தி இருக்காது. கணவர்மனைவிக்குள்ஒற்றுமை பாதித்து விலகும. 20, 21-ந் தேதிகளில் நிமமதியை பாதிக்கும நாட்களாகையால் புதிய முயற்சிகளில் ஈடுபடாமல் விலகி இருப்பது நன்மையை உண்டாக்கும. சாதாரணமான வாரமாகும

### கும்பம்

(அவிட்டம் 3, 4-ம பாதம சதயம், பூரட்டாதி 1, 2, 3-ம் பாதம்)

ராசிநாதன் சனி ஆறுமிடத்திலிருக்க சுகஸ்தானத்தில் செவ்வாயும் வக்கிரம் பெற்ற போக்கு மனக்கவலைகளை அதிகரித்து காரியத் தடங்கல்களை கொண்டு வந்தாலும் பாதிக்காது பண விஷயமான முயற்சிகள் தாமதித்தாயினும் வியாழன் பலத்தால் வெற்றி கிட்டாமல் போகாது. பணம் கடன் வாங்க வேண்டிய சந்தர்ப்பங்கள் மிகுதி, கையில் கிடைக்கும் பணம் கட்டுப்படுத்த முடியாத செலவினங்களால் கரைந்து விடும். தொழில், உத்தியோகம் போன்ற துறைகளில் 21-ந் தேதிக்கு மேல் செவ்வாய் வக்கிரம் நீங்கிப் பார்வைக் கொடுப்பதால், இதுவரை இருந்த தேக்க நிலை மறைந்து முன்னேற்றமும். புதிய உற்சாகமும் உண்டாகும். வியாபாரத்தில் சூரியன் சுய சாரத்தில் செல்வதால் பாதிக்காது. எனினும், அரசாங்க சம்பந்தமான செலவினங்கள் தலைதாக்கும். குடும்ப ஒற்றுமை பாதிக்காது. உறவினர், நண்பர் போன்றவர்களின் சுபகாரியங்களில் பங்கெடுத்துக் கொள்வீர்கள்.

### மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.)

ராசியில் வியாழன் உன்னத பலம பெற்று நிற்க லாபத்தில் புதன் வக்கிரம பெற்று சனியின் பார்வையில்இருப்பதால் விரைவில் ஆக வேண்டிய காரியங்கள் அதிகமாக தாமதித்து நடைபெறும பணவிஷயத்தைம பொறுத்து கேது நல்ல பலத்தில் சஞ்சரிப்பதால்எப்படியும கைக்குபணம வந்துவிடும. தொழில் மற்றும உத்தியோகத் துறையில் வியாழன் ஆட்சிபெற்று நிற்பதால் பாதிப்பு இல்லாவிடினும புதிய பொருப்புகளை நிர்வகிக்கவேண்டிய சூழ்நிலை உண்டாகும தொழில் துறையில் உற்பத்தி மந்தமாகயிருக்கும வியாபாரத்தைப் பொருத்து புதன் லாபத்தில் சந்திரன் சாரத்தில் வக்கிரம பெறுவதால் எப்படியும லாபம வராமல் போகாது கிடைக்கும செய்திகள் ஊக்கம தருவதாக மட்டும அமையும, கணவர் மனைவிக்குள் அன்பும ஆதரவும உண்டாகும வாரககடைசியில் செவ்வாய் 21ந்தேதி வக்கிரம நீங்கியபின் வேண்டியவர் சுப காரியங்கள் இனிது முடியும.

---

## இலங்கையில் இருந்து இந்தியா வந்தோர் $1\frac{1}{2}$ லட்சம்பேர்

சென்னை, ஜன. 17—சென்ற ஆண்டில் இலங்கையிலிருந்து இந்தியாவுக்கு வெளியேறி வந்தவர்களின் எண்ணிக்கை 18,500 ஆகும். இதுவரை இலங்கையிலிருந்து வெளியேறி வந்தவர்களின் மொத்த எண்ணிக்கை 1,57,000 என்று வெளிநாட்டிலாகா செயலாளர் கேவல்சிங் சென்னை விமான நிலயத்தில் நிருபர்களிடம் கூறினார்.

வெளியேறி வரும் நடவடிக்கை ஒழுங்காக நடைபெற்று வருகிறது. இதில் குறிப்பிடத்தக்க பிரச்னை எதுவும் எழவில்லை என்றும் அவர் சொன்னார்.

---

## தினப்பலன்

### 'நவமணிஜோதிடர்'

**18—1—1976**

**ஞாயிற்றுக்கிழமை**

இராக்ஷஸ ஆண்டு தை மாதம் 4-ந்தேதி அமரபட்ச பிரதமைதிதி காலை 8.11 வரை. பிறகு துதியை பூச நட்சத்திரம் காலை 9.46 வரை. பிறகு ஆயில்யம், சித்தயோகம்.

ராகுகாலம் மாலை $4\frac{1}{2}$ மணி முதல் 6 மணிவரை.

எமகண்டம் காலை 12 மணி முதல் $1\frac{1}{2}$ மணிவரை. மேற்கே சூலம்.

நல்ல நேரம்:—

காலை $7\frac{1}{2}$ மணி முதல் 9 மணிவரை. 11 மணி முதல் 12 மணி வரை. பிற்பகல் 2 மணி முதல் 3 மணி வரை. மாலை 6 மணி முதல் 7 மணி வரை.

தின ராசி பலன்:—

மேஷம் – பல கவலை
ரிஷபம் – அலைச்சல் மிகுதி
மிதுனம் – தனலாபம்
கடகம் – உடல் அசதி
சிம்மம் – அதிக செலவு
கன்னி – லாபம்
துலாம் – காரியத் தடங்கல்
விருச்சிகம் – மருந்து செலவு
தனுசு – கடன் தொல்லை
மகரம் – எதிர்ப்புகள்
கும்பம் – உழைப்பு மிகுதி
மீனம் – சினிமா செலவு அதிகம்

---

இனியும் வேறொரு காங்கிரஸ் இருக்கிறது என்று கூறினல்

## "தி. மு. க. காங்கிரஸ்": பக்தவத்சலம் வெளியிட்ட அறிக்கை

சென்னை, ஜன. 17—இரு காங்கிரஸ் இணைப்புக்கு பிறகும் இன்னொரு காங்கிரஸ் இருக்கிறது என்று யாராவது கூறினல் அது தி. மு. க. காங்கிரஸ் என்று முன்னள் முதல்வர் பக்தவத்சலம் கூறினர்.

இது பற்றி அவர் ஒரு அறிக்கை வெளியிட்டார்.

அதில் அவர் தெரிவித்த தாவது:—

ஜனவரி மாதம் 26-ந்தேதி குடியாட்சி திருநாளாகும். இந்தவிழா சிறப்புவாய்ந்தது. தமிழ் நாட்டில் கொஞ்ச காலமாக பிரிந்திருந்த இரு காங்கிரசும் மீண்டும் சேர்ந்து விட்டது.

சம்பிரதாய முறையில் இணைப்பு விழா, அடுத்த மாதம் பிரதம மந்திரியின் முன்னிலையில் சிறப்பாக நடைபெறும். ஆனல் இப்பொழுதே தமிழ்நாட்டில், காங்கிரஸ் ஒன்றாகிவிட்டது.

சென்ற புதுவை மாநாட்டின் போதே 'இனி காங்கிரஸ் ஒன்றுதான்' என்று காமராஜர் பிரகடனம் செய்தார். அவர் நினைவை அவரிடம் நம்பிக்கை கொண்ட ஊழியர்கள் நிறைவேற்றி விட்டார்கள். இந்திரா காந்தியும் மனப்பூர்வமாக இந்த இணைப்பை வரவேற்றிருக்கிறார்.

### தி.மு.க. காங்கிரஸ்

இனி ஸ்தாபன காங்கிரஸ் அல்லது பழைய காங்கிரஸ் என்பது ஒன்றுமில்லை. வேறு ஒரு காங்கிரஸ் இருக்கிறது என்று இன்னும் சிலர் வாதாடுவார்களானல் அது தி. மு. க. காங்கிரசாகத்தான் இருக்கும். எனவேவரப்போகிறகுடியரசு தினத்தை இரு காங்கிரசும் சேர்ந்தே சிறப்பாகக் கொண்டாடுவது நலமென்று நான் கருதுகிறேன்.

தமிழ்நாடு புது காங்கிரஸ் தலைவர் கே. எஸ், ராமசாமி ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் மகாதேவன் பிள்ளை ஆகியோரை நான்கேட்டுக்கொள்வது என்னவென்றல் அந்தந்த காங்கிரஸ் கமிட்டிகளுக்கு அறிக்கை விடுத்து, தனித்தனியாக கொண்டாடாமல் சேர்ந்து கொண்டாட ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதேயாகும் இந்திரா காந்தி சென்னையில் நிகழ்த்திய பேருரையை தமிழ் நாட்டிலுள்ள காங்கிரஸ்காரர்கள் கேட்டு பெருமிதமடைந்திருக்கின்றனர். அதற்கு ஏற்றவாறு ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் நாம் அடுத்த குடியரசு தினத்தை விமரிசையாகவே, கொண்டாடுவோம். என்றர் பக்தவத்சலம்.

## மலேசியப் பிரதமர் மறைவு: இந்திரா அனுதாபம்

புதுடெல்லி, ஜன. 17—மலேசியப் பிரதமர் துங் அப்துல் ரசாக் மறைவிற்கு பிரதமர் இந்திரா காந்தியும், ஜனதிபதி பக்ருதீன் அலி அகமதும் இரங்கல் தெரிவித்து இருக்கிறர்கள்.

லண்டன் மருத்துவமனையில் காலமான மலேசியப்பிரதமர் துங் அப்துல் ரசாக்கின் உடல் விசேஷ விமானத்தில் கோலாலம்பூருக்கு நேற்று முன்தினம் எடுத்துச் செல்லப்பட்டது.

மலேசியாவின் துணைப் பிரதமராக இருந்த தத்தோ உசேன் ஆன் பிரதமராக பதவிப் பிரமாணம் செய்விக்கப்பட்டுள்ளார்.

காலஞ்சென்ற துங் அப்துல் ரசாக்கின் இறுதிச் சடங்கில் இந்தியாவின் சார்பில் கலந்து கொள்ள மத்திய அமைச்சர் ராஜ் பகதூர் கோலாலம்பூருக்கு சென்றுள்ளார்.

மலேசியப் பிரதமர் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் வகையில் டெல்லியிலும், மாநிலத் தலைநகரங்களிலும் இந்திய தேசியக் கொடி அரைக் கம்பத்தில் பறக்க விடப்பட்டுள்ளன.

## 'சமூகத் தீங்குகளை நீக்க சினிமா': ஜனதிபதிபேச்சு

ஹைதராபாத், ஜன. 17—சமூகத் தீங்குகளை நீக்குவதற்கு சினிமாவைப் பயன்படுத்த வேண்டும். பொழுது போக்குக்காக மட்டுமின்றி அறிவூட்டுவதாகவும் சினிமா இருக்க வேண்டும் என்று ஜனதிபதி கூறினர்.

ஹைதராபாத்தில் அன்னபூர்ண ஸ்டுடியோவை ஜனதிபதி பக்ருதீன் அலி அகமது திறந்து வைத்தார். அங்கு அவர் பேசும் போது அறிவித்ததாவது:

சமுதாய முன்னேற்றத்திற்கான மாறுதல்களை ஏற்படுத்தும் சாதனமாக சினிமாவை பயன்படுத்த வேண்டும்.

கிராம வளர்ச்சிப் பணிகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் காரணமாக அமைதியான, உண்மை பூர்வமான நலனைக் கருதி கிராமங்களில் ஏற்பட்டுவரும் மாறுதல்களை சினிமா காட்சிகள் தெரியப்படுத்த வேண்டும்.

இவ்வாறு ஜனதிபதிகூறினர்.

## மத்திய அரசு ஊழியர் கிராக்கிப்படி 6-வது தவணை பரிசீலனை

புதுடெல்லி, ஜன. 17—மத்திய அரசு ஊழியர்களின் கிராக்கிப்படி 6-வது தவணை கோரிக்கை பரிசீலனையில் இருப்பதாக துணை நிதி மந்திரி சுசீலா ரோட்டகி கூறினர்

ரூ. 309 கோடிக்கான துணை மானியக் கோரிக்கைகள் நேற்று மக்கள் சபையில் நிறைவேறின.

துணை மானிய கோரிக்கைகளின் மீதான விவாதத்துக்கு துணை நிதி மந்திரி பதிலளிக்கையில், ஏற்கனவே 5 தவணைகள் நிறைவேற்றியாகி விட்டதென்றும், ஆறுவது தவணைக்கான கோரிக்கை வந்துள்ளதென்றும் கூறினர்.

ஆறுவது தவணை கோரிக்கையைப் பரிசீலிக்கையில் மொத்த வரவு செலவு நிலவரம், நிதி வசதிகளை திரட்டல் நிலை முதலியவற்றை அரசாங்கம் கருத்தில் கொள்ள வேண்டியிருக்கிறது. இருப்பினும், ஆறுவது தவணை கோரிக்கை எங்கள் பரிசீலனையில் இருக்கிறது என்பது உறுதி. பென்ஷன்தாரர்களுக்கான கூடுதல் கிராக்கிப்படி சம்பந்தமாகநான்காவது தவணை கோரிக்கையும் பரிசீலனையில் உள்ளது என்று கூறினர்.

ஒவ்வொரு கூடுதல் கிராக்கிப்படி தவணைக்கும் ரூ. 47 கோடி அல்லது ரூ. 50 கோடி செலவாகிறது என்றும், இதைத் தவிர பென்ஷன் தாரர்களுக்கு வேறு உள்ளது என்றும் கூறினர்.

இது மிகவும் சணிசமான தொகை. அடுத்த நிதி ஆண்டுக்கான வரவு—செலவு திட்டம் சபையில் தாக்கல் செய்யப்படும்போது. இந்த எல்லா அம்சங்களும் கருத்தில் கொள்ளப்படுமென்றும் சுசீலா ரோட்டகி கூறினர்.

1975-76-ஆம் ஆண்டு ரெயில்வே துணை மானிய கோரிக்கையும் நேற்று மக்கள் சபையில் நிறைவேறியது.

துணை ரயில்வே மந்திரி ஷபீ குரேஷி பதிலளிக்கையில் ரெயில்வே தொழிலாளிகளின் திறமையான பணிக்குப் பாராட்டு தெரிவித்தார். சபை உறுப்பினர்கள் புது ரெயில்பாதைகள், மேல்பாலங்கள் கோரியதைக் குறிப்பிட்டு எல்லாவற்றையும் நிறைவேற்றுவதென்பது சாத்தியப்படாத தென்றும் முன்னுரிமைகளை நிர்ணயிக்கவேண்டியிருக்கிறது என்றும் கூறினர். சென்னைக்கு டெல்லியிலிருந்து மற்றொரு வேகமான வண்டி விடுவதற்கான முயற்சி நடந்து வருவதாகக் கூறினர்.

பிராவிடெண்ட் நிதி ஊழியர்

## குறைந்தது ரூ. 100 கிராக்கிப்படி அளிக்குமாறு கோரிக்கை

சென்னை, ஜன. 17—இந்திய முற்போக்கு பிராவிடெண்ட் நிதி ஊழியர் சமமேளன அகில இந்திய நிர்வாகக் கமிட்டி கூட்டம தலைவர் மாத்யூ குரியன் எம். பி தலைமையில் இங்கு இரண்டு நாட்கள் நடைபெற்றது. ஊழியரின் கோரிக்கைகளுக்குத் தீர்வு காண அகில இந்திய அளவில் இயக்கம துவங்க கமிட்டி முடிவு செய்தது, தேவைக்கேற்ப, குறைந்தபட்ச ஊதியம அளிக்கப்படவேண்டும் இடைகால நடவடிக்கையாக 'ஏ' வகுப்பு பாங்கு அளிக்கும் ஊதிய விகிதங்கள் அளிக்கப்பட வேண்டும். குறைந்தது ரூ, 100 கிராக்கிப்படி அளிக்கப்பட வேண்டும். பிராவிடெண்ட் நிதி ஸ்தாபனத்தை ஒரு தொழிலாக கருதி சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்திருப்பதால் போனஸ் அளிக்கப்பட வேண்டும் என்பன ஊழியர்களின் கோரிக்கைகள்.

## தொழிலாளருக்கு 'செக்' வழங்க மசோதா

புதுடெல்லி, ஜன. 17—தொழிலாளருக்கு ரொக்கமாக மட்டும் இதுவரை ஊதியம் வழங்கப்பட்டு வந்தது. இதனை 'செக்'காகவும் வழங்கும் மசோதாவை ராஜ்ய சபையில் தொழிலாளர் நல அமைச்சர் ரகுநாத ரெட்டி கொண்டு வந்தார்.

இந்த மசோதாவினல் லேவாதேவிக்காரர்களிடமிருந்து தொழிலாளர்கள் காக்கப்படுவார்கள் என்று அவர் குறிப்பிட்டார். பின்னர் மசோதா நிறைவேறியது.

# சென்னையில் அனைத்து இந்திய ரெயில்வே ஹாக்கி போட்டி

சென்னை, ஜன. 17— 38-வது அனைத்து இந்திய ரெயில்வே ஹாக்கி சேம்பியன் ஷிப் போட்டி சென்னையில் நடந்து வருகிறது.

இம் மாதம் 24-ந் தேதி வரை சென்னை, எழும்பூர் மாநகராட்சி ஸ்டேடியத்தில் நடைபெறும். இந்தப் போட்டியை தென் பிராந்திய ரெயில்வே ஜெனரல் மானேஜர் எம.ஆர். ரெட்டி துவக்கி வைத்தார்.

ஒலிமபிக் ஹாக்கிப்போட்டியில் விளையாடிய வி. ஜெ. பிலிப்ஸ், வி. ஜெ. தாமஸ், பாஸ்கரன், சுர்ஜித் சிங், ஓம்காசிங், அசோக் திவான், வீரேந்திரசிங், மைக்கேல் கின்டோ ஆகிய பிரபல ஆட்டக்காரர்கள் இந்த போட்டியில் கலந்துகொண்டார்கள்.

தென் பிராந்திய ரெயில்வே விளையாட்டுக் கழகம் இதற்கான ஏற்பாடுகளை செய்துள்ளது.

14 அணிகள் பங்கேற்கும் இந்த ரெயில்வே ஹாக்கிப் போட்டியில், ஏராளமான பேர் பார்த்து ரசிக்க வசதியாக நுழைவு கட்டணங்கள் குறைவாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

இந்தத் தகவல்களை தென் பிராந்திய ரெயில்வே தலைமை மக்கள் தொடர்பு அதிகாரியும் ரெயில்வே விளையாட்டுக் குழுவின் கவுரவ செயலாளருமான கே. பி. ஏ. ராஜா தெரிவித்தார்.

# விவசாய பம்பு செட்டுக்கு மின் சப்ளை: 18-ந்தேதி முதல் மீண்டும் கட்டுப்பாடு

**சென்னை, ஜன, 17—கிராமப்புற பம்ப் செட் மின்சார உபயோகத்திற்கு மீண்டும் கட்டுப்பாடு கொண்டுவர தமிழக அரசு முடிவு செய்துள்ளது.**

இந்தக் கட்டுப்பாடு 18 ம் தேதி காலை 6மணியில் இருந்து அமுலுக்கு வருகிறது.

இந்தப் புதிய கட்டுப்பாட்டின் மூலம் கிராம மின்சார உபயோகிப்பாளர்கள் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்படுவார்கள்.

நீர்ப்பாசனத்திற்கு திறந்து விடப்படும் நீர் அளவு குறைந்து விட்டதால் நீர் மின்சார அளவும் குறைந்து விட்டது. ஆனால் கிராமப்புற விவசாயிகள் தாமுக முன் வந்து கட்டுப்பாடு செய்து கொள்ளாததால் இந்தக் கட்டுப்பாட்டை அரசு கொண்டு வந்திருக்கிறது

முதல் பிரிவு காலை 6 மணியில் இருந்து நடுப் பகல் 12 மணி வரை பம்புசெட்டுகளுககு மின்சாரம் வழங்கும்.

இரண்டாவது பிரிவு நடுப் பகல் 12 மணிக்கு துவங்கி மாலை 6 மணி வரை மின் சாரம் வழங்கும்.

மாலை 6 மணியில் இருந்து இரவு 10 மணி வரை பம்ப செட்டுகளுக்கு மின்சாரம் வழங்கப்படமாட்டாது. பிறகு இரவு 10 மணியில் இருந்து காலை 6 மணி வரை இரு பிரிவினருக்கும் மின்சாரம் வழங்கப்படும்.

15 நாட்களுக்கு ஒருமுறை பிரிக்கப்பட்ட பிரிவுகளின் நேரம் மாற்றப்படும்.

இந்த விவரங்களை மின்வாரியத் தலைவர் எம்.எம். ராஜேந்திரன் அறிவித்துள்ளார்.

# மயிலை தீ விபத்து: 130 பேர் கைது

சென்னை, ஜன, 17—சில தினங்களுக்கு முன்பு மயிலாப்பூரிலும், மந்தவெளியிலும் நடந்த தீ விபத்துகள்சம்பந்தமாக இதுவரையில் இரண்டு பெண்கள் உட்பட 130 பேர் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

இந்த விபத்துக்களில் 81 குடிசைகள் நாசமாயின. முன் ஜாக்கிரதையாக அந்தப் பகுதிகளில் தியணைப்பு இஞ்சின்கள் வைக்கப்பட்டுள்ளது.

# சமரசம் செய்யச் சென்றவர் படுகொலை

சென்னை, ஜன. 17—அண்ணன் மகன் கலாட்டா செய்ததாகவும், விசாரிக்க வருமபடியும் அழைத்துச் செல்லப்பட்ட ஒருவர் பயங்கரமாகப் படுகொலை செய்யப்பட்டார்.

பட்டாபிராமன் (வயது 45) அம்பத்தூர் புதுக் கருணாநிதி நகரைச் சேர்ந்தவர். இவருக்கு 6 பிள்ளைகள் உள்ளனர்.

பட்டாபிராமன் அண்ணன் மகன் கலாட்டா செய்ததாகவும், இதைப் பற்றி விசாரிக்க வேண்டுமென்றும் அவரைச் சிலர் அழைத்துச் சென்றுள்ளனர்

அவரது அண்ணன் வீட்டில் எதிரில் ஏற்பட்ட தகராறில் பட்டாபிராமனை சிலர் தடிகளால் அடித்து படுகாயப் படுத்தினர்.

பட்டாபிராமன் அரசாங்கப் பொது மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டு பரிதாபமாக மாண்டார்.

அம்பத்தூர் போலீசார் விசாரணை செய்து வருகின்றனர்.

# இந்திரா, நைரேரே பேச்சுவார்த்தை

புதுடெல்லி, ஜன. 17—இங்கு நடந்த இந்தியா-தான்ஸானியா ஒன்றரை மணிநேர உச்சக்கட்டப் பேச்சுவார்த்தைகளில், அங்கோலாவின் தென் ஆப்ரிக்கா குறுக்கீடுபற்றி தான்ஸானியா அதிபர் ஜூலியஸ் நைரேரே இந்தயப் பிரதமர் இந்திரா சாந்தியிடம் கடும் எதிர்ப்பு தெரிவித்தார்.

அங்கோலா பிரச்னையில் தீர்வு காண்பதில் ஆப்பிரிக்க ஐக்கிய ஸதாபனம் தோல்வியுற்றதும் இங்கு வந்துள்ள நைரேரே தென்னாப்பிரிக்க குறுக்கீடு பற்றி ஆட்சேபித்தார்.

உலக பொதுவான விஷயங் பற்றி அவர்கள் பேசினர்.

நைரேரே, இந்திய வெளி விவகார அமைச்சர் ஒய். பி. சவானுடனும, அங்கோலா நிலைமை பற்றி பேசியதாகத் தேரிகிறது.

# பிரும்மானந்த ரெட்டி தமிழகம் வருகிறார்

சென்னை, ஜன. 17—மத்திய உள்துறை அமைச்சர் பிரும்மானந்த ரெட்டி இம் மாதம் 19—ம் தேதி தமிழகம் வருகிறார்.

20—ம் தேதி தஞ்சை மாவட்டம் திருவையாறில் நடக்க இருக்கும் தியாகப் பிரும்ம உற்சவத்தை அவர் துவக்கி வைக்கிறார்.

19-ம் தேதி மாலை திருப்பதியில் இருந்து சென்னைக்கு வந்து திரும்பி போகிறார்.

20-ம் தேதி தியாகப் பிரும்ம உற்சவத்தை துவக்கி வைத்துவிட்டு அன்று இரவே சென்னைக்கு திரும்புகிறார்.

# ரேஸ் செய்தி

## ஞாயிற்றுக்கிழமை ரேசுக்கு டிப்ஸ்

சென்னை, ஜன 17— நாளை சென்னை கிண்டியில் நடைபெறவிருக்கும் ரேசில் கலந்து கொள்ள இருக்கும் குதிரைகளின் பெயர்கள், எடை, ஜாக்கிகள் பெயர்கள். டிரா எண்கள், டிப்ஸ் ஆகியவை வருமாறு:—

**1. வாட் நெக்ஸ்ப் பிளேட்**
1200 மீட்டர் 1-45 மணி

1 மக்னுனிமஸ் 61-00 — பியாரே—4
2 லாயல் டார்க் 60-00 — பிக்ரட்டா—1
3 லாஸ் பால்மாஸ் 54-50 — லோவே—3
4 ட்ருபிரண்ட் 53-00 — ஆசாத்—2
5 ஸ்ரீலட்சுமி 49-00 — இ டி. மார்ஷல்—5

டிப்ஸ் :
1. ட்ரு பிரண்ட்
2: மக்னுனிமஸ்

**2. ஆள்வார் பிளேட்டிவி-II**
1000 மீட்டர் 2-20 மணி

1 ஸ்வீட் ரிவெஞ்ச் 54-00 — பிக்ரட்டா—4
2 பேர் வெதர் 54-00 — கௌட்—7
3 கம்மாண்டிங் பாய் 54-00 — எஸ். மார்ஷல்—1
4 பிளேசிங் ஸ்டார் 52-50 — லோவே—2
5 ஸ்ரீசெந்து 52-50 — ரகிமான்—8
6 டொனுப் ராணி 52-50 — புஞ்ச்சா—9
7 சாய் கீர்த்தி 52-50 — மகமத் அகமத்—5
8 ஆர்த்தி 52-50 — கரன்சிங்—6
9 ஸ்காட்ச் கிப்ட் 52-50 — திருமூர்த்தி—3

டிப்ஸ்:
1 தி கமாண்டிங்பாய்
2 ஸ்வீட்ரிவெஞ்ச்
எதிர்பாராத வெற்றி: ஆர்த்தி

**3. உட்டி கோப்பை**
1600 மீட்டர் 3-மணி

1 பெனவலன்ஸ் 60-00 — ஸ்வயம்பர்ன்—1
2 ஹண்டர்ஸ்மூன் 58-50 — மாத்தயூஸ—2
3 யங்மூர் 58-50 — எஸ். மார்ஷல்—6
4 பீட்டர் ஸ்காட் 56-50 — லோவே—5
5 பேஸ்தி பாக்ட்ஸ் 55-00 — கரண்ட்—7
6 காட்ஸ கிப்ட் 47-00 — வில்ஸ—4
7 ஹரிஹர பிரியா 47-00 — எல். மார்ஷல்—3

டிப்ஸ்:
1 யங் மூர்
2 பேஸ்தி பாக்ட்ஸ்
எதிர்பாராத வெற்றி: பெனவலன்ஸ்

**4. ராகவ வாமா கோப்பை**
1600 மீட்டர் 3-35 மணி

1 சித்தார்த்தா 60-00 — கரன்சிங்—2
2 கிரேடில் டாப் 59-50 — ஓவெல்—1
3 மிஸ் டோக்கியா 58-50 — லோவே—10
4 பிளேயிங் ராக்கெட் 58-50 — ஆசாத்—9
5 கிங் தாஸ் 56-50 — மாத்தியூஸ்—8
6 போனிஸ காட்லாந்து 54-50 — பியாரே—4
7 கிரேபேர்ல் 53-00 — டி. சில்வர்—5
8 ராஜ்வன்ஷ் 49-50 — மஞ்சே—3
9 கோலடன பிராஸலெட் 48-00 — புஞ்சா—7
10 மிஸ்டர் ஒண்டர்புல் 7-504 — லாரன்ஸ்—6

டிப்ஸ்:
1, மிஸ் டோக்கியோ
2. சித்தார்த்தா
எதர்பாராத வெற்றி: பிளேயிங் ராக்கெட்

**5. மெர்ச்சண்ட்ஸ் கோப்பை**
1600 மீட்டர் 4-10 மணி

1 ராயல் பிரின்சஸ் 60 00 — எஸ். மார்ஷல்—2
2 லேட்னிங் எண்டர் பிரைசஸ் 58.00 — கரண்ட்—7
3 குட் ஹால்ட் 52-50 — கௌட்—4
4 ஸ்ட்ரீக் ஆப் பார்ச்சூன் 51-50 — மனசே—5
5 ஹார்பர் லைட்ஸ் 48-50 — புஞ்சா—3
6 சன்ஸ்ட்ரீக் 47-00 — எல். மார்ஷல்—1
7 ஜூலியஸ்சீசர் 47-00 — பெருமாள்—6

டிப்ஸ் :
1 குட்ஹார்ப்
2 ராயல் பிரின்சஸ்
எதிர் பாரா வெற்றி: லேட்னிங் எண்டர் பிரைசஸ்

**6 எச் டி ராஜா நினைவுக் கோப்பை**
1200 மீட்டர் 4-45 மணி

1 மேக் ஏ டபுள் 60-00 — பெருமாள்—9
2 மைட்டி பிளான் 59-50 — எல். மார்ஷல்—2
3 சாலஞ்சர் 59-00 — வில்ஸ—5
4 ராயல் சபையர் 52-00 — புஞ்சா—6
5 சிஜிபபி 52-00 — கெஸ்ட்—4
6 சுப்ரீம் பவர் 50-50 — இ டி மார்ஷல்—7
7 பாடிவாக் 49-50 — லோவே—11
8 பென் டி ஆர் 49-00 — மாத்தியூஸ்—10
9 டயரஸ்ட் 49-00 — ஆசாத்—3
10 மைக்கல் ஆஞ்சலோ 46-[illegible] — லாரன்ஸ்—8
11 எவர்கிரீன் 45-50 — தயால்—1

டிப்ஸ் :
1 ராயல் சபையர்
2 மேக ஏ டபுள்
எதிர்பாரா வெற்றி: பாடிவாக்

**7. ஆள்வார் பிளேட் டிவி-1**
1000 மீட்டர் 5-20 மணி

1 தண்டர் தண்டர் 54-00 — கசின்ஸ்—2
2 சலமன்கா 54-00 — மனசே—3
3 பாபிலான் 54-00 — செக்கோயரா—4
4 ஈவ் 53-50 — ஆசாத்—5
5 வெலாசிட்டி 52-05 — எஸ். மார்ஷல்—9
6 கோம்தி 52-50 — கரண்சிங்—7
7 நலினி 52-50 — பிக்ரிடோ—8
8 லக்கிவிஷ் 52-50 — கெஸ்ட்—1
9 சப் ஹோஸ்டஸ் 52-50 — ஜ, கான்—6

டிப்ஸ்:
1 லக்கி விஷ்
2 பாபிலோன்
எதிர்பாராத வெற்றி: கோம்தி

## நிச்சய வெற்றி

ராயல் சபையர்

**ஜாக்பாட்**
3, 4, 5, 6, 7 ரேஸ்கள்

**முதலாவது டிரிபுள்**
1, 2, 3 ரேஸ்கள்

**இரண்டாவது**
5, 6, 7 ரேஸ்கள்

**டபுள்**
6, 7 ரேஸ்கள்

**தனலா**
2, 4, 6 ரேஸ்கள்

# வள்ளுவர் கோட்ட திறப்பு விழா ஒத்திவைப்பு

சென்னை, ஜன. 17— வள்ளுவர் கோட்ட திறப்பு விழா பிப்ரவரி 15-16-ம் தேதிக்குப் பதில் 22-23 தேதிகளுக்கு ஒத்தி வைக்கப்பட்டு இருப்பதாக முதல்வர் தெரிவித்தார்.

பிப்ரவரி 15ம் தேதி பிரதமர் நிகழ்ச்சி இங்கே இருப்பதாகத் தெரிவதால் வள்ளுவர் கோட்ட திறப்பு விழா 22ம் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டுள்ளதாகவும் முதல்வர் தெரிவித்தார்.

## நகை வியாபாரி வீட்டில்

# ரூ. 13 ஆயிரம் நகைகள் பறிமுதல

கோவை, ஜன. 17—நகை வியாபாரி ஒருவரது வீட்டில் சுங்க இலாகா அதிகாரிகள் சோதனையிட்டு ரூ.13 ஆயிரம் மதிப்புள்ள கணக்கில் காட்டப்படாத நகைகளைப் பறிமுதல் செய்தனர்.

லாரியில்சென்ற ஒருவரைத் துரத்திச்சென்று சின்னம பாளையத்துக்கு அருகில் அவரைப் பிடித்து 10 கிலோ கிராம கஞ்சாவை அவரிடமிருந்து சுங்க அதிகாரிகள் கைப்பற்றினா. அந்த நபரை போலீசாரிடம ஒப்படைத்தனர்.

# ரூ. 4 லட்சம் கிராம்பு சிக்கியது

ராமநாதபுரம், ஜன. 17—ராமநாதபுரத்திற்கு அருகில் உள்ள தேவிப்பட்டினத்தில் நேற்றிரவு 18 மூட்டைகள் கிராம்பை சுங்க அதிகாரிகள் கைப்பற்றினர். அந்த கிராம்பு மூட்டைகளின மொத்த மதிப்பு சுமார் ரூ. 3 லட்சம் இருக்கும். அவை இலங்கையிலிருந்து கடத்திக் கொண்டு வரப்பட்டவை எனச் சொல்லப்படுகிறது.

கீழக்கரைக்கருகில் ஏர்வாடியில் மொத்தம் ரூ. 1 லட்சம் மதிப்புள்ள ஏழு கிராம்பு மூட்டைகளையும் சுங்க அதிகாரிகள் கைபபற்றினர். அம் மூட்டைகளும் இலங்கையிலிருந்து கடத்திக் கொண்டு வரப்பட்டவை.

## கள்ளப்பண கணக்கு

# தாமாகவே முன்வந்து தகவல் தந்தோர் எண்ணிக்கை 13,382

**புதுடெல்லி, ஜன 17—மறைக்கப்பட்ட சொத்துக்கள் சம்பந்தமாக 13 ஆயிரத்து 382 பேர் தகவல்களைத் தெரிவித்திருப்பதாக மத்திய வருவாய்த்துறை துணை மந்திரி பிரனப் முகாஜி தெரிவித்தார.**

மக்கள் சபையில் உறுப்பினர்களின் கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் மேற்கண்ட தகவலை தெரிவித்தார.

அண்மையில் மறைக்கப்பட்ட சொத்துக்களை வெளியிட்டவர்களின சொத்துக்களை என்ன செய்யப் போகிறீர்கள் என்று கேட்டதற்கு அது குறித்து இப்போது எதுவும் சொல்ல முடியாது என்றார் அமைச்சர்.

எந்தச் சட்டத்தின்கீழ் அவர்கள் சொத்துக்களை வெளிபிட்டார்களோ, அந்த சட்டத்தின்கீழ் நடவடிக்கை எடுக்கப்படும் என்றார் அவர்.

செசத்தை வெளிப்படுத்தியவர்களை துறவிகள் என்று கருதுவீர்களா என்று ஒரு உறுப்பினர் கேட்டார்.

கிடைக்கப்பட்ட புள்ளி விவரங்களிலிருந்து ரூ. 6·91 கோடி செலுத்தப்பட வேண்டிய வரியில் ரூ. 3.99 கோடி வசூலாகிவிட்டது என்று கூறினர்

கடன் பத்திரங்களில் ரூ. 9.38 கோடி முதலீடு செய்யப்பட்டிருப்பதாகவும் மந்திரி தெரிவித்தார்.

இதுவரை 13 ஆயிரத்து 382 பேர் மறைக்கப்பட்ட சொத்துக்கள் பற்றி தகவல் தந்திருப்பதாகவும் அவர் கூறினர்.

## ரூ. 50 லட்சம் வரிபாக்கிக்காரர்

ரூ. 50 லட்சத்துக்கு மேல் வரிபாக்கி வைத்துக்கொண்டிருப்பவர்கள் 10 பேருக்கு மேல் உள்ளனர் என்றார் அவர்.

ரூ. 10 லட்சத்துக்கு மேல் வரிபாக்கி வைத்துக் கொண்டிருப்பவர்கள் 800-க்கு மேல் உள்ளனர் என்றும அவர் தெரிவித்தார்.

ஜெய்ப்பூர் அரண்மனையில் சோதனையிட்டு வருமானவரி அதிகாரிகள் ரூ. 9,9 கோடி சொத்துக்கள் பறிமுதல் செய்திருப்பதாகவும் அவர் கூறினர்,

தங்கக் கட்டுப்பாடு சட்டத்தின் கீழ் ரூ.4.9 கோடி தங்கம் பறிமுதல் செய்யப்பட்டிருப்பதாகவும் கூறினர்.

## தமிழகத்திற்கு

# 1976-77-ம் ஆண்டு திட்டச் செலவு ரூபாய் 177 கோடி

**புதுடெல்லி. ஜன. 17—1976-77.ம் ஆண்டு திட்டத்திற்கு ரூ. 177 கோடி ரூபாய் தமிழகத்திற்கு அனுமதிக்கப்பட்டுள்ளது. தமிழக அரசு 277 கோடியே 60 லட்சம் ரூபாய் கேட்டு இருந்தது.**

1976—77-ம் ஆண்டுக்கான முதலீட்டு நிதி ஒதுக்குவது சம்பந்தமாக நேற்று புது டெல்லியில் நடந்த பேச்சு வார்த்தையில் இந்த முடிவு எடுக்கப்பட்டது.

## மாதவன்

மத்திய திட்டக்குழு துணைத் தலைவர் பி. என் ஹக்சருடன் தமிழக சட்ட மந்திரி எஸ். மாதவன பேச்சுவார்த்தை நடத்தினர்.

மாதவனுடன மாநில அரசு தலைமை செயலாளர் பி சபாநாயகம் நிதிதுறைசெயலாளர்கள் ஆகியோரும் இருந்தனர்.

ஆண்டு திட்டத்திற்கான மத்திய உதவி பற்றி பிறகு முடிவு எடுக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

1975-76ம் ஆண்டுக்கு ரூ. 143.6 கோடி ஒதுக்கப்பட்டு இருக்கிறது. ஆனால் இந்த காலத்திற்கான திட்டச் செலவிற்காக தமிழக அரசு சுமார் ரூ. 160.90 கோடி செலவிட்டுள்ளது. இதற்கு மத்திய உதவி ரூ 41 கோடி கிடைத்துள்ளது.

1976—77 ம் ஆண்டுக்காக ஒப்புக்கொள்ளப்பட்ட ரூ177 கோடியில் விவசாயசம்பந்தப்பட்டவைகளுக்கு ரூ. 22·20 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

கூட்டுறவுத்துறைக்கு ரூ 2·53 கோடியும், நீர், மின்சார உற்பத்திமேம்பாட்டு ரூ. 80·84 கோடியும்தொழில் சுரங்கத்துறைகளுக்கு ரூ9.85 கோடியும் ஒதுக்க ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

எழுத்துலகம்: 32-ம் படைப்பிலக்கியப் பெருவிழா: தலைமை: முரசொலி அடியார். கவிதைகளை திறனுய்பவர்: கோ. கண்ணன். மாவட்ட மத்திய நூலகம், அண்ணாசாலை, மாலை 5-30 மணி.

அண்ணா இலக்கியப் பட்டி மன்றம். பொங்கல் விழா கருத்தரங்கு தலைமை: வீ. நடராசன், பேசுவோர்: அ. இளம்வழுதி எஸ். கஸ்தூரி அருள் மொழிவில்வம் மற்றும் பலர்: மாநகராட்சி நடுநிலைப் பள்ளி திடல், கோடம்பாக்கம் மாலை 6 மணி

தமிழ்நாட்டு நல்வழி நிலையம்: வான்புகழ் வள்ளுவர் வாரம். அங்கயற்கண்ணி நூல்வெளியீடு விழா: தலைமை அமைச்சர் ராசாராம், சிறப்புரை: கி. வா. ஜகந்நாதன் த. ரா. முருகவேல், மா. செங்குட்டுவன் மற்றும் பலர். பாரதீய வித்யாபவன் அரங்கம்: கிழக்கு மாட வீதி மயிலை. காலை 10-15 மணி.

பெரியார் கருத்தரங்கம்: தலைமை: கி. வீரமணி பேசுவோர்: வி. சி. குழந்தைசாமி வி. சண்முக சுந்தரம் பி, பழனியப்பன், மா. நன்னன் பி. ஜெகதீசன். பெரியார் திடல் மாலை 6-00 மணி.

## இன்றைய சினிமா

சென்னை
காமதேனு: நாககன்னி
மேற்கு மாம்பலம் நேஷனல்: தாய்
ராம்: நாகக்கன்னி
ஈராஸ்: பல்லாண்டு வாழ்க
நியூ எல்பின்ஸ்டோன்: வெளுத்த கத்ரீனு
குரோம்பேட்டை
வெற்றி: கர்ணன்
உலகம் சுற்றும் வாலிபன்
பல்லாவரம்
லட்சுமி: பாட்டும் பரதமும்
தாம்பரம்
நேஷனல்: அந்தரங்கம்
கொளத்தூர்
ஸ்ரீ குமரன்: அன்பே ஆருயிரே
திருக்கழுக்குன்றம்
கன்னியப்பா: குமரிப்பெண்
புவனேஸ்வரி: ரோஷக்காரி

# அமெரிக்க ஜனாதிபதியை கொல்ல முயன்ற பெண்ணுக்கு தண்டனை

சான்பிரான்சிஸ்கோ, ஜன. 17—அமெரிக்க ஜனாதிபதி போர்டை கைத் துப்பாக்கியால் சுட்டுக்கொல்ல முயற்சித்த சாரா ஜேன் மோர என்ற பெண்மணிக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது இவருக்கு வயது 45.

இவர் அமெரிக்க துப்பறியும் ஸ்தாபனத்துக்கு தகவல் தருபவராக இருந்தவர்

சான்பிரான்சிஸ்கோ ஓட்டலுக்கு வெளியே ஜனாதிபதி போர்டை இந்தப் பெண்மணி கைத் துப்பாக்கியால் சுட்டுக் கொல்ல முயற்சித்தார்.

நீதிமன்றத்தில் இந்தப் பெண்மணிக்கு தண்டனை விதிக்கப்படுவதற்கு முன்பு நீண்ட நேரம் பிரசங்கத்தை திருமதி மோர் செய்தார்.

அமெரிக்க உளவு ஸ்தாபனம் தன்னை ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொண்டதாக அவ குறிப்பிட்டார். கொலையானது அரசியல் நடவடிக்கையேயாகும் என்று தான் இன்னமும் கருதுவதாக அவர் தெரிவித்தார்.

# கல்லூரி மாணவர்கள்: பிணி ஒழிப்பு திட்டம்

சென்னை, ஜன. 17—தேசிய சேவை திட்டத்தின் கீழ் விவேகானந்தா கல்லூரி மாணவர்கள்காட்டாங்குளத்தூர் பஞ்சாயத்து யூனியனில் ஒரு வாரம் தங்கி பிணி ஒழிப்பு திட்டத்தை நடத்தினர். இந்த முகாமில் 50 மாணவர்கள் கலந்து கொண்டனர்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P.P.S Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd
Editor-in-charge: G. Dhanaraj